# இராமானுசர்



இந்நூல் திருமலை - திருப்பதி தேவஸ்தான
நிதி உதவியுடன் வெளியிடப்படுகிறது

மனசை நளினா

# இராமானுசர்

சொல்லோவியம்

மனசை நளினா, B.Sc.



நூல் வெளியீட்டாளர்

'தணிக்கை' 135, சாந்தி நகர்

குரோம்பேட்டை : : சென்னை-600 044

தொலைபேசி : PP 402433

*Title* :
RAMANUJAR
Documentary Feature in Tamil

*Author*
MANASAI NALINA B. Sc.,

*Wraper Design*
GOPAN

*Pages* : 92

*First Publication* : September, 1988

*Printers*
ARUL PRINTERS
39-A, Vembuliamman Koil Street
Palavanthangal, Madras-600 114

*Publishers*
SANGAM
Book Publishers
'Thanighai' 135, Shanthi Nagar
Chromepet, Madras-600 044

Phone : PP 402433

*Price* : Rs. 7



**Prof. C. V. SETHUNATHAN,**
B.Sc. (Hons.)
Retd. Registrar & Technical Officer, Centre for Rural Development, I. I. T., Madras
Secretary & Projects Co-ordinator, Tamil Nadu Board of Continuing Education, Madras

## பாராட்டுரை

கி. மு. 3000-க்கு முற்பட்ட வேத-உபநிடத சமஸ்கிருத பண்பாடுதான் பாரத சமுதாயத்தின் சமய தத்துவ சமூக முறைகள் வளர அடிப்படையாக இருந்தது, என்பது இன்று நிறுவப்பட்ட உண்மையாக விளங்குகிறது. அந்தக் காலத்திலேயே பல நூற்றாண்டுகளாக உயர்ந்தோங்கிய தமிழ் இலக்கியம் ஏற்கனவே வளர்ந்து இருந்ததால் தென்னகத்தின் தமிழ்ப் பண்பாட்டில் இது ஏற்றுக் கொள்ளப்படத் தக்கதாக விளங்கிற்று.

ஆதி சங்கரரின் அத்வைத ஆய்விலிருந்து விசிஷ்டாத்வைதம் தோன்றிற்று, எனச் சொல்லலாம். தென்னிந்திய ஆச்சாரியர்கள் தமது பரந்த உள்ளத்தால் தமிழ்-திவ்வியப் பிரபந்தப் பண்பாட்டுடன் ஒரு வேத - உபநிடத - பகவத் கீதை பண்பாட்டுடன் இணைக்க விரும்பினர். இப்படித் தான் தென்னகத்தில் உபய வேதாந்தம் தோன்றி

யது. இந்தச் சூழ்நிலையில்தான் விசிஷ்டாத் வைதம் பிரசித்தி பெற்றது.

ஸ்ரீராமனுஜர் இந்தப் பண்பாட்டு வளர்ச்சிக் கும் பிரசாரத்திற்கும் காரணமாக இருந்த பரமாச் சாரியர். அத்தகைய பெரிய ஆச்சாரியாருக்கும் சில சந்தேகங்கள் இருந்தன, என்பது வியப்புக் குரியது. (உண்மையான ஐயங்கள் இல்லாத ஒரு வன் ஜடமான உயிர்ப்பில்லாத மனத்திற்குச் சமம்.) ஸ்ரீ ராமனுஜரின் குரு தர்மபுரியைச் சேர்ந்த திருக்கச்சி நம்பி அவரின் ஐயங்களைப் பின்வருமாறு தீர்த்தார் :

''அகம், ஏவ பரம் தத்துவம் தரிசனம் து வேதமேவ சா....''

''கடவுள் ஒருவரே. நமது நோக்குக்கு ஏற் பவே கடவுள் நமக்குத் தோன்றுகிறார்.''

அனைத்துச் சமயங்களும் ஒன்றாக இணைய வும், அதனால் சச்சரவுகள் நீங்கவும் இதைவிட உயர்ந்த பண்பாடு வேறு ஏதாவது இருக்க முடியுமா?

இத்தகைய ஒருவரின் புனித வாழ்க்கை வர லாறு, தியாகம், பிரம்மாண்டமான பணிகள் ஆகியவை யாவும் எல்லோரும் அறியச் செய் வதும், அதனால் வாழ்வில் பரந்த நோக்கும்,

பிறரையும் ஏற்கும் நோக்கும் பெற்று, எளியோரின் லோகாயுத, பண்பாட்டுச் செல்வத்துக்குத் தொண்டாற்றி ஓரளவுக்காவது வளரும் வகையில் ஒவ்வொருவரும் உயருவார்.

**பின்னுரை**யில் தம் மாணவர் பருவத்திலிருந்தே பல நல்ல நூல்களை எழுதி வருபவரும், பிரமாதமான எழுத்தாளரும், பல பரிசுகளைப் பெற்றவருமான **கலைமாமணி மணசை ப. கீரன்** பின்வருமாறு கூறுவது மிகவும் பொருத்தமானதே:

''நாம் பாரம்பரியத்தைக் காத்து வர ஸ்ரீராமனுஜர் போன்ற ஞானிகளின் வரலாற்றைப் படித்து உணர வேண்டும். உயரிய சிந்தனைகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். வருங்காலத் தலைவர்களாக உருவாகப் போகிற மாணவ - மாணவியர் படித்துப் பயன் பெற வேண்டியது மிக மிக அவசியம்.''

சலிப்புறத் தக்க நீண்ட உரையாக இருந்திருக்கக் கூடிய நூல், உரையாடல் அமைப்பில் உள்ளது. இளையோர், முதியோர் ஆகிய அனைத்து வயதினருக்கும் இந்தச் சொல்லோவியம் சுவையாக இருக்கிறது. அதிலேயே மூழ்கிவிடச் செய்கிறது.

நமது புராதன சமய-பண்பாட்டுப் பாரம்பரியத்தின் ஒருமையைக் காணவே இந்து மதத்தின்

எல்லாப் பிரிவுகளும் நாடுகின்றபோக்கு இன்றைய நிலையில் காணப்படுவது வரவேற்கத் தக்கதாக இருக்கிறது. இது முழுதாக ஏற்கத் தக்கது. பிறப்பு, நல்ல தகுந்த வழியில் வாழ்வது, இனிதே வாழ்க்கையை நிறைவு செய்வது, பிறருக்குச் சிறந்த வகையில் நன்மையைச் செய்து, பயனுற வாழ்ந்து, அமைதியில் இணைவது ஆகியவையே முடிவான தத்துவம். சிறுமை, வேறுபாடுகள், சமய வெறி ஆகியவற்றைக் கருதுவோருக்கு ஸ்ரீராமனுஜரின் சிறந்த முன்னுதாரணம் வழி காட்டியாக இருக்கட்டும்.

இந்த விரும்பத் தக்க நோக்கத்தை நன்கு நிறைவேற்ற, பள்ளிக் கல்வியில் எல்லா வகுப்பு மாணவர்க்கும், நாட்டில் நசுக்கப்படும் நலிந்தோரின் பாதுகாவலனாகிற தேசிய எழுத்தறிவு முனைப்பு இயக்கத்திற்கும் இவ்வரிய வெளியீடு பெரிதும் உதவும். இந்நூல் எல்லாப் பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகம் மற்றும் பொது நூலகங்களிலும் சேர்க்கப்பட வேண்டிய விரும்பத் தக்க சேர்க்கை ஆகும். இந்நூலுக்குள்ள நல்ல தகுதியால் இது மிகத் தாராளமாக வரவேற்கப்படும், என நம்புகிறேன்.

பேராசிரியர் **சி. வி. சேதுநாதன்**




**இரா. வெங்கடாச்சாரி**

இயக்குநர்

மாநிலப் பள்ளிசாராக் கல்விக் கருவூலம்

சென்னை-35.


## வாழ்த்துரை

சமயம், மனித வாழ்க்கையுடன் பின்னிப் பிணைந்தது. நாம் கடைபிடிக்கும் பல சமயக் கோட்பாடுகள் நம் நாட்டு சான்றோர்களின் வாழ்க்கையிலிருந்தும், அனுபவங்களிலிருந்தும் தோன்றியவை.

இராமானுஜர் வைணவப் பெரியார்களில் ஒருவர். எளிமையாக வாழ்ந்து தன்னை உய்வித்துக் கொண்டவர். இக்கால சந்ததியினருக்கு அப் பெரியாரின் வாழ்க்கையை எளிய நடையில் வெளிக்கொணர்ந்த கலைமாமணி மனசை. **ப. கீரன்** பாராட்டுதலுக்குரியவர் இந்நூல் நமது இந்திய பாரம்பரியத்தை காக்கும். வயது வந்த அனைவருக்கும் பயனளிக்கும்,

**இரா. வேங்கடாச்சாரி**

# பதிப்புரை

சமூக நலத் தொண்டர்கள், செயல் வீரர்கள் போன்றவர்களின் வாழ்வும் சாதனையும் நாம் நல்ல வழியில் செயல்படப் பெரிதும் உதவுவன.

தொண்டுக்கே ஓர் உருவான அப்பர் அடிகள், சமய ஆய்வு நடத்தி துன்பப்பட்டும் புது வாழ்வினைக் கடையனிலும் கடையனுக்கும் அருளிய இராமானுசர், எளிமையிலே ஓர் உயரிய சிந்தனையும் நாட்டு விடுதலையும் அடையச்செய்த காந்தி அண்ணல் போன்றோரை விட்டால் நமக்கு நல்வழியை யாரே காட்ட வல்லார்!

திருப்பெரும் பூதூரில் சுமார் ஆயிரம் ஆண்டு களுக்கு முன்னர் வாழ்ந்து தொடர்ந்து இன்னல் களைக் கண்ட இராமானுசரின் வரலாறு மாணவர்க்கும், புதிதாகப் படிப்போருக்கும் நல் வழிகாட்டி.

இராமானுசர் பற்றிய நூலைத் தமிழ் உலகுக்கு வழங்குவதில் பெருமைப்படுகின்றோம்.

—சங்கம்

நூல் வெளியீட்டாளர்கள்

# இராமானுசர்

பாமன்ன மாது பொருந்திய பன்மார் புகழ் மலிந்த

பாமன்னு மாறன் அடிபணிந் துய்தவன் பல்கலையோர்

தாமன்ன வந்த இராமாநுசன் சரணாவிந்தம்

நாமன்னி வாழ நெஞ்சே சொல்லுவோம் அவன்நாமம்.

(அர்ச்சனை பின்னணி)

**வழிகாட்டி :** ஆஹா ! திவ்ய மங்கள வேளை; சந்நிதிக்கு வந்த வேளை, உற்சவமூர்த்திக்கு நடக்கும் ஆராதனையில் நனையும் வாயிப்பு கிட்டியது... என் பூர்வ ஜென்ம பலன்தான். ஸ்ரீராமநுஜாய நம........

**அர்ச்சகர் :** ஸ்ரீமதே ராமநுஜாய நம.... எம்பெருமானார் திருவடிகளே சரணம்.... இவ்வுலகை இயக்கும் உத்தமரை எல்லாரும் சேவிச்சுக்குங்கோ நல்லா சேவிச்சுக்குங்கோ.... பிரசாதம் வாங்கிக்குங்கோ....

**வழிகாட்டி :** நம்மை உடையவர், நமக்கு உடையவர், எம்பெருமானை, உடையவர் எம்பெருமானுக்கு உடையவர், உபய வேதாந்தத்தை உடையவராகிய ஸ்ரீராமாநுஜர் சந்நிதி திவ்விய தேசங்கள் எல்லாவற்றிலும் உண்டு. ஆனால் ஸ்ரீரங்கக் கோயில் உடையவர் சந்நிதிதான் வெகு விசேஷமானது. காரணம் இங்கேதான் அவர் திருமேனி அடக்கம்.

**அர்ச்சகர் :** எந்தெந்தத் தர்மப் பிரவர்த்தகக் காரியங்களுக்கெல்லாம் ஆபத்து நேரிடுகிறதோ, அந்தந்தத் தர்மங்களைக் காக்க

நானே உலகில் வந்து அவதரிக்கிறேன் - இது கீதாச்சாரியன் வாக்கு.

(குழந்தை அழுகுரல்)

**வழிகாட்டி :** ஸ்ரீவைணவ ஐதீகப்படி, சென்னை மாநகர்ப் பிருந்தாவன க்ஷேத்திரமாகிய திருவல்லிக்கேணி கீதாச்சாரியரான ஸ்ரீபார்த்தசாரதிப் பெருமாளே, ஸ்ரீபெரும்புதூர், ஆசூரி சர்வகிருது கேசவ சோமாஜி தீட்சிதர் - காந்திமதி தம்பதியர்க்குக் குழந்தையாக உகந்து அவதரிக்கிறார்.

**அர்ச்சகர் :** இராமலட்சுமனாள், புத்திர காமேஷ்டியாகம் செஞ்சு பிறந்ததுபோலே, இந்தக் குழந்தையும் புத்திர காமேஷ்டியாக, யக்ஞ பிரார்த்தனா வரப்பிரசாதமாய்ப் பிறக்கிறது.

**வழிகாட்டி :** 1017-ஆம் ஆண்டு ஏப்ரல் 4 ஆம் நாள் வசந்தகால, சித்திரைத் திங்கள், வெள்ளிக்கிழமை, திருவாதிரை நல்லோரை கூடிய நன்னாள் சமய உலகுக்கும், சமுதாய உலகுக்கும், சகல உலகுக்குமே பொன்னான நாள். ஆம். அன்றுதான் அந்தத் தெய்விகப் புருஷர் திரு அவதாரம் செய்கிறார்.

**பாடகர் :** அடையார் கமலத்து அலர்மகள் கேள்வன்கை ஆழியென்னும் படையோடு

நாந்தகமும் படர்தண்டும் ஒண் சார்ங்க வில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலம் காப்பதற்கென்று இடையே இராமநுச முனியாயின இந்நிலத்தே !

**அர்ச்சகர் :** திருப்பதி ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் கைங்கரிய பூஷிதரான, தாய் மாமன், பெரிய திருமலை நம்பிகள், குழந்தை யோட திவ்ய தேஜஸைக் கண்டு அதிசயித்துடுறார். குழந்தை லட்சுமணப் பெருமாள் லட்சணங்களைக் கொண்டு பிறந்திருக்கிற தாலே - லட்சுமணோ லட்சுமி சம்பந்: ன்னு ஆசீர்வதிச்சு இளைய பெருமாள் ஞாபகார்த்தமா அதுக்கு ராமாநுஜர்னு நாமகரணம் பண்ணிவைக்கிறார்.

**வழிகாட்டி :** இளையாழ்வார் என்றும் பெயர் வழங்கி வருகிறது. இளையாழ்வார் 15 வயது வரை தம் தந்தையிடமே கல்வி கற்று வருகிறார். இராமாநுஜர் இளமையிலேயே கல்வி, கேள்விகளிலும், அறிவாற்றல் அனுஷ்டானங்களிலும் அதிமானுஷ்யராகத் திகழ்கிறார்.

**அர்ச்சகர் :** பதினாறாவது வயசிலே தஞ்சமாம்பாள் என்கிற ரூப சௌந்தர்யவதியை விவாகம் செஞ்சு வைக்கிறார். ஒரு மாசத்

துக்கெல்லாம் தகப்பனார் நோய்வாய்ப் பட்டுப் பரம பதிச்சுடுறார்.

(வேத பாடசாலைப் பின்னணி)

**வழிகாட்டி :** அடுத்த ஆண்டில் காஞ்சி புரத்தில் குடும்பத்துடன் குடியேறுகிறார், இராமாநுஜர். அந்தக் காலத்திலே, காஞ்சியை அடுத்த திருப்புட் குழிக் கிராமத்திலே, யாதவப்பிரகாசர் என்னும் அத்வைத ஏக தண்ட சந்நியாசி குருகுலப் பாடசாலை நடத்தி வருகிறார். அவர் மகா மேதை, வேத சாஸ்திர விற்பன்னர். அந்தக் குருகுலத்தில் இராமாநுஜர் சேர்ந்து பயின்றுவருகிறார். இராமாநுஜர் தலைசிறந்த மாணாக்கராய் இருக்கக் கண்ட யாதவப் பிரகாசர் அவர் மீது மிகுந்த அன்பும் அபிமானமும் பாராட்டி வருகிறார்.

**அர்ச்சகர் :** குரு அத்வைதவாதி. சிஷ்யரோ விசிஷ்டாத்வைதத்திலே ஊறியவர். அவரை அப்படி உருவாக்கினவர் பகவத் விஷயப் பிரபன்ன பாகவதோத்தமத் திருக்கச்சி நம்பிகள்.

**வழிகாட்டி :** திருக்கச்சி நம்பிகள் பெரும் செல்வச் சீமானாக இருந்தவர். செல்வங்கள் அனைத்தையும் தான தருமங்களில் வாரி

இறைத்துவிட்டு வைத்த மாநிதியாகிய பகவத் கைங்கரியத்தை மேற்கொண்டிருக்கும் பரம பக்தர். விசிஷ்டாத்வைதத்தின் ஆணிவேர். அவரை அடிக்கடி சந்தித்து அளவளாவுவதிலும், அவர் பிரவசனங்களையும் உபதேசங்களையும் கேட்டு மகிழ்வதிலும் பெரிதும் ஈடுபாடு கொள்கிறார் இராமாநுஜர். அதன் காரணமாகத் தீவிர விசிஷ்டாத்வைத சம்பன்னராக உருவாகி யாதவப் பிரகாசரின் வியாக்கியானத்துக்கு மறுப்புத் தெரிவிக்கவும் துணிகிறார்.

**யாதவப் பிரகாசர் :** தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணி - என்ன அர்த்தம் தெரியுமோ, பிரம்மாவின் கண்கள் குரங்கின் ஆசனம்போல் சிவந்திருந்தன.

**இராமாநுஜர் :** (திடுக்கிட்டு) ஆங் !

**யாதவ :** என்ன ஓய் ராமாநுஜரே. ஏன் இப்படித் திடுக்கிடுகிறீர்?

**இரா :** தேவரீர் கூறிய விளக்கம் சரியாக. .

**யாத :** புரியவில்லையா ?

**இரா :** க்ஷமிக்க வேண்டும். சரியாக இல்லை.

**யாத :** (கடிந்து) என்ன சொன்னீர் ! உபநிஷதப் பொருளையா குற்றங் கண்டுபிடிக்கத் துணிந்தீர்.

**இரா :** உபநிஷதப் பொருள் இப்படிக் குற்ற முள்ளதாக இருக்குமா ஸ்வாமி ?

**யாத :** பின் எப்படி இருக்கும் ?

**இரா :** இறைவனின் கண்கள் காலையில் மலரும் செந்தாமரை போல இருந்தன - இது தான் சரியான பொருள்.

**யாத :** நிறுத்தும் உம் அதிகப் பிரசங்கித் தனத்தை. அன்றொரு நாள், நாம் சத்தியம், ஞானம், அனந்தம் ஆசியவையே பிரமம் என்றோம். அதற்கு நீர் ....

**இரா :** சத்தியம், ஞானம், அனந்தம் ஆகிய குணங்களை உடையது பிரமம் என்று, கூறினேன். .

**யாத :** இப்படியே மறுப்புக் கூறிக்கொண்டிருந் தால் என்ன அர்த்தம் ? நீர் நமக்குக் குருவா அல்லது நாம் உமக்குக் குருவா, ஏது ! நீர் மற்றைய சீடர்களையும் கெடுத்து விடுவீர் போலிருக்கிறதே ! நம்மிடம் கிரமமாகப் பாடம் கேட்க விருப்பம் இல்லையேல் நீர் வேறிடம் செல்லலாம்.

**வழிகாட்டி :** இப்படியே அத்வைதத்துக்கும் விசிஷ்டாத்வைதத்திற்கும் போட்டி முற்று கிறது. அத்வைதத்திற்கு இராமாநுஜரால் ஆபத்து என்று அப்போதே அஞ்சுகிறார் யாதவப் பிரகாசர். அதனால் எப்படியாவது இராமானுஜரைச் சதிசெய்து கொன்றுவிட வேண்டுமென்று திட்டமிடுகிறார். அதன்படி சிஷ்யர் குழாத்துடன் காசி யாத்திரை கிளம்பு கிறார்.

**அர்ச்சகர் :** கள்ளங்கபடமற்ற இராமாநுஜ ருக்கு அந்தத் திட்டம் பற்றிய விபரம் தெரியாது. சிற்றன்னை மகன் கோவிந்தப் பட்டருக்கு மட்டும் சந்தேகம். யாத்திரைக் கோஷ்டி விந்திய மலைச்சாரலிலே முகாமிடுற போது கோவிந்தப்பட்டருக்கு விஷயம் தெரிஞ்சு ராமாநுஜரிண்டை ரகசியமாச் சொல்லிடுகிறார். அதைக் கேட்டதும் அவர் அப்படியே அதிர்ச்சியடைஞ்சுடுறார்.

**வழிகாட்டி :** தம்மைக் கொல்லும் அளவுக்குத் தம் குரு வெறுப்பை வளர்த்திருக்கிறாரே என்று உடையவர் வேதனையடைந்தாலும் அந்தப்பாவத்துக்குக் குருவை ஆளாக்கக் கூடாதே என்ற எண்ணம்தான் முனைப்பாக நிற்கிறது. அதனால் கோவிந்தப்பட்டரிடம் மட்டும் விடை பெற்றுக்கொண்டு எவரும் அறியாமல் அவர் காஞ்சிக்குத் திரும்புகிறார்.

அந்தத் திக்குத் தெரியாத கானகத்திலே. தன்னந்தனியாய் எங்கே போவது எப்படிப் போவது என்று தெரியாமல் திணறித் திண்டாடுகிறார். ஆயினும் தைரியத்தைக் கைவிடவில்லை. பகவான் மீது பாரத்தைப் போட்டுக் கால் போன போக்கில் வழி நடக்கிறார். அப்போதுதான் சரணாகதியின் மகோந்நத சக்தியைத் தம் வாழ்க்கையில் முதன் முதலாக அனுபவிக்கிறார்.

**அர்ச்சகர் :** ராமாநுஜர் பசி மயக்கந் தெளிஞ்சு கண் விழிச்ச போது ஒரு வேடுவனும் வேட்டுவச்சியும் அவருக்கு வழித்துணையா வந்து சேர்றா. அவாளோடு பகலெல்லாம் நடந்து ராத்திரி ஒரு இடத்திலே இளைப் பாறுறார். அப்போ வேட்டுவச்சிக்குத் தாகம் எடுக்கிறது. அங்கே பக்கத்திலே ஒரு கிணறு இருக்கிறதுன்னும், ஆனா அந்த நிசி வேளை யிலே அதைக் கண்டு பிடிக்கிறது சிரமமுன்னும் வேடன் சொல்லிண்டிருக்கான். அதைக் கேட்டுண்டிருந்த இளையாழ்வார் பொழுது விடிஞ்சதும் விடியாததுமா கிணத்தைத் தேடிக் கண்டு புடிச்சு வேட்டுவச்சி தாகம் தணியத் தண்ணி கொண்டு வர்றார்.

**வழிகாட்டி :** ஆனால் வேடுவத் தம்பதியை அந்த இடத்தில் காணவில்லை. தாம் மட்டும்

காஞ்சியின் எல்லையை வந்தடைந்திருப்பதைக் கண்டு வியப்பும் திகைப்பும் அடைகிறார். அதற்குள் அவ்வளவு தொலைவைக் கடந்து எவ்வாறு வரமுடிந்தது, அவரால் நம்பவே முடியவில்லை. அப்போதுதான் அந்த வேடுவத் தம்பதி யார் என்று அவருக்குத் தெரிய வருகிறது. ஆபத்துக் காலத்தில் அடியார்க்கு அருள்சுரக்கும் ஆபத்பாந்தவனைச்சரணடைந் தால் எத்தகைய அற்புதம் நிகழ்கிறது என்பதை உணர்ந்ததும் அவர் ஆனந்த பரவச மடைகிறார். வேட்டுவச்சிக்குத் தாகம் தணியத் தண்ணீர் கொண்டு வந்த அதே சாலைக் கிணற்றிலிருந்துதான் பின்னாளில் தேவராஜன் திருவாராதனைக்குத் தீர்த்தம் கொணரும் கைங்கரியம் செய்து வருகிறார், இராமநுஜர்.

**அர்ச்சகர் :** ராமாநுஜர் தன்னோட திருமாளிகைக்கு வந்து தாயார் காந்திமதி அம்மாகிட்டே தனக்கு வரவிருந்த ஆபத்தைப் பத்திப் பிரஸ்தாபிக்கிறார். ஆனா அவர்கிட்டே உள்ள பெருந்தன்மை யினாலே அதை யாருக்கும் சொல்லக் கூடாதுன்னு அம்மாவிடம் வாக்குறுதி வாங் கிக்கிறார்: குருநாதர் பெயருக்கு அபகீர்த்தி வந்துடக் கூடாதேங்குறதிலே அவ்வளவு முன்னெச்சரிக்கை அவருக்கு.

**வழிகாட்டி :** யாதவப் பிரகாசர் காசியாத் திரையிலிருந்து காஞ்சிக்குத் திரும்புகிறார். இராமாநுஜர் காட்டு விலங்குகளுக்கு இரையாகிவிட்டார் என்று அவர் நம்பியிருந்ததற்கு மாறாக, அவர் உயிருடன் நமக்கு முன்பே ஊருக்கு வந்திருப்பதை அறிந்து யாதவப் பிரகாசர் அதிர்ச்சியும் ஏமாற்றமும் அடைகிறார். ஆயினும் அதனை அவர் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. மறுபடியும் சக சீடர் குழாத்துடன் இராமாநுஜர் வித்தை பயின்று வருகிறார்.

**அர்ச்சகர் :** ஒரு சமயம் காஞ்சிக்கு அருகிலிருந்து சிற்றரசன் குமாரிக்குப் பிரம்ம ராக்ஷஸ் பிடித்திருப்பதாகச் செய்தி வருகிறது. யாதவப் பிரகாசர் தன் மாயாஜால மந்திர சக்தியினாலே அதை ஓட்ட முடியவில்லை. உடன் போயிருந்த உடையவர் குணப் படுத்துகிறார். இதனாலே குருவை மிஞ்சி விட்டார்னு ராமாநுஜரை எல்லாரும் பாராட்டுறா. யாதவப் பிரகாசராலே அதுக்கு மேலே தாங்கமுடியலை. ஆத்திரமும் பொறாமையும் அவர் கண்ணை மறைச்சுடுறது; ராமாநுஜரைப் பாடசாலையை விட்டு நீக்கிடுறார்.

**வழிகாட்டி :** இராமாநுஜர் குருவுக்கு மிஞ்சிய சீடர் மட்டுமல்லர். பின்னாளில் அந்தக்

குருவையே திருத்திச் சீடராகக் கொண்டு குருவுக்கே குருநாதரான மகத்தான யோக சாதனையும் வசீகர சக்தியும் படைக்கப் பெறுகிறார். நீர் நமக்குக் குருவா என்று கேட்டது நிஜமாகவே பலித்துவிடுகிறது. அவர் குருக்களுக்குள்ளே பரமகுரு. ஆச்சாரி யாருக்குள்ளே பரமாச்சாரி.

**அர்ச்சகர் :** இளையாழ்வார் யாதவப் பிரகாசரைவிட்டு விலகியதும் திருக்கச்சி நம்பி களிடம் வித்தியாப்பியாசம் தொடர்கிறார். அந்த அதிசய இளைஞர் கம்பீரத் தோற்றம், மேதா விலாசம், ஆழ்ந்த பாண்டித்தியம் முதலானதுகளைக் கண்ட திருக்கச்சி நம்பி களுக்கு அவரைச் சிஷ்யரா ஏத்துக்கிறதிலே ரொம்ப மகிழ்ச்சி. ஆண்டில் இளைஞ ரானாலும் ஞானத்தில் முதியவர் என்கிறது அவர் கணிப்பு. ஸ்ரீவைஷ்ணவத்தோட எதிர் காலம் அந்தச் சீடர் கையிலேதான் இருக்குங் குறது அவர் தீர்க்க தரிசனம். அதனாலே அதுக்கு ஏத்தாப்பிலே அவரை உருவாக்குற திலே அக்கறை கொள்றார். சாலைக் கிணத்துத் தீர்த்த திருமஞ்சன கைங்கரியத் திலே ஈடுபடுத்தித் தெய்வீக புருஷராக்குகிறார்.

**வழிகாட்டி :** திருக்கச்சி நம்பிகள் ஆளவந்தார் சீடர்களில் குறிப்பிடத் தக்கவர் ஸ்ரீஆளவந்தார். அந்தக் காலத்திலே

ஸ்ரீவைணவ சமயத்தின் புகழ் பெற்ற பரமாச்சாரியார் அரங்கன் திருக்கோயில் ஆதீன கர்த்தராக விசிஷ்டாத்வைத பீடாதிபதியாகவும் பிரசித்தி பெற்றவர். திருவரங்கத்திலே சீரங்கராஜ சாம்ராஜ்யத்தை நிர்வகித்து வந்த அவர், தமக்குப் பிற்காலம் ஆச்சாரிய பீடத்தை அலங்கரிக்கத் தகுந்த வாரிசு ஒருவரைத் தேடிக்கொண்டிருக்கிறார். அவர் இராமாநுஜரைப் பற்றிப் பன்முறை கேள்விப்பட்டிருக்கிறார். அதனால் அவரைக் காணவேண்டுமென்ற ஆவல் தூண்டுகிறது, அவர் காஞ்சிக்கு வரதராஜபெருமாளைச் சேவிக்கச் சென்றிருந்தபோது சற்றுத் தொலைவில் சென்றுகொண்டிருந்த இராமாநுஜரை அடையாளம் காட்டுகிறார் திருக்கச்சி நம்பிகள்.

**அர்ச்சகர் :** ஆஜானுபாகுவாய், நெடிய உருவத்தோடு; செக்கச் சிவந்த திருமேனியராய்க் கருணை ததும்பும் தெய்வீக முகப் பொலிவைக் கண்டு ஆளவந்தார் பிரமிப்பு அடைகிறார். நாதமுனிகள் காலத்திலே, எதிர் காலத்தில் வரப்போகும் திரு அவதாரப் பிற்கால ஆச்சாரிய விக்கிரகம் கிடைத்துத் தொடர்ந்தாற்போல அது ஆளவந்தார் காலம் வரை அவராலும் ஆராதிக்கப்பட்டு வருகிறது. அந்தப் பவிஷ்யதாச்சாரியார் விக்கிரக அங்க அடையாளங்கள் அப்படியே

இராமாநுஜர்கிட்டே அமைஞ்சிருக்கிறதைக் கண்டதும் ஆளவந்தார், இவரே ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் வருங்காலத் தலைவர்னு தீர்மானிச்சுடுறார்.

**வழிகாட்டி :** அந்தத் தீர்மானத்துடன் இளையாழ்வாரைத் தமக்குச் சீடராக்கி அருள்புரிய வேண்டுமென்று எம்பெருமானை வேண்டிக் கொள்கிறார். மாணாக்கர்கள் குருவை மானசீகமாக ஏத்துக் கொள்வார்கள். ஆனால் ஆளவந்தாரோ சீடரை மானசீகமாக வரித்துக் கொள்கிறார். அத்தகைய ஏற்றம் பெற்றவர் ஸ்ரீ இராமாநுஜாச்சாரியார்.

**அர்ச்சகர் :** தன் ஆதர்ச சிஷ்யனைத் ஆளவந்தார் நேரிலே சந்திக்காமலே ஸ்ரீரங்கத்துக்குத் திரும்பிவிடுகிறார். அவர் முதுமையினாலே தளர்ச்சியடைகிறார். அந்திம காலம் நெருங்குகிறதை உணர்றார். உடனே பிரதம சிஷ்யர் பெரிய நம்பியைக் காஞ்சிக்கு அனுப்பி ராமாநுஜரை அழைச்சுவரக் கட்டளையிடுறார். அப்படியே அழைச்சு வர்றதுக்குள்ளே ஆளவந்தார் திருநாடு அடைஞ்சுடுறார்.

**வழிகாட்டி :** தம் ஆதர்ச குருநாதரை உயிருடன் பார்க்க முடியாமல் போயிற்றே என்று பெரிதும் வருந்துகிறார், இராமாநுஜர்.

ஆனால் குருவிற்குச் செலுத்தும் காணிக்கையாக, ஆளவந்தாரின் 'நெடுநாளைய விருப்பங்களான மூன்று லட்சியங்களை அவர் ஆசியாலும் இறைவன் அருளாலும் நிறைவேற்றி வைப்பதாகச் சூளுரைக்கிறார். அவற்றுள் ஒன்று பிரம்ம சூத்திரத்திற்குப் பாஷ்யம் எழுதுவது. அதற்குத் தம்மைத் தகுதிப் படுத்திக் கொள்ள இடையறாது கற்கத் தொடங்குகிறார், இராமாநுஜர்.

**அர்ச்சகர் :** ஆரம்பத்திலேயே தேவராஜப் பெருமாளிடம் பக்தியையும் கைங்கரியத்தையும் ஊட்டி வளர்த்த திருக்கச்சி நம்பியே ராமாநுஜரோட முதல் ஆசான், மூல ஆசான். அவரை ஒரு நாள் தன் இல்லத்துக்கு அமுதுண்ண அழைக்கிறார், இராமாநுஜர். நம்பிகளும் சிஷ்யர் அழைப்பை அன்போட ஏத்துக்கிறார். அந்த நல்ல செய்தியைத் தன் துணைவியார் கிட்டே சொல்லித் ததியாராதனைக்கு ஏற்பாடு செய்கிறார், ராமாநுஜர். அது அவர் வாழ்க்கையிலே ஒரு திருப்பத்தை ஏற்படுத்தின வரலாற்றுப் புகழ் பெற்ற பொன்னாள்! இராமாநுஜர் தம் ஆசானை அழைத்து வரத் திருமடத்திற்குச் செல்கிறார். ஆனால் அவரைக் காணாமல் தம் திருமாளிகை திரும்புகிறார். அங்கே தம் மனைவியார் நின்ற கோலத்தைக் கண்டதும் ஒன்றும் புரியாமல் வினவுகிறார் அவர்.

**இராமாநுஜர் :** ஏன் தஞ்சம் ! இந்த வேளை யில் தீர்த்தமாடி நிற்கிறாய் ?

**தஞ்சம் :** அந்தப் பாகவதர் அப்போதே வந்து போய்விட்டார்.

**இரா :** என்ன !

**தஞ்சம் :** அவர் வேறு வழியாக வந்திருப்பார் போலிருக்கிறது. பெருமாள் கைங்கரியத் துக்குப் போக வேணுமென்று அவசரமாக அமுது செய்து போய்விட்டார். அவர் சாப் பிட்ட இலையைக் கோலால் ஒதுக்கித் தள்ளி விட்டு, இடத்தைச் சாணத்தால் சுத்தி செய்து தீட்டுப் போகத் தீர்த்தமாடி நிற்கிறேன்.

**இரா :** (திடுக்கிட்டு) என்ன, தீட்டுப் போகத் தீர்த்தமாடினாயா ? என்ன தீட்டு ?

**தஞ்சம் :** அவர் தாழ்ந்த சாதி அல்லவா ? வர்ணாஸ்ரம தருமத்துக்கு இழுக்கு நேரா வண்ணம் அப்படிச் செய்தேன்.

**இரா :** உன் வர்ணாஸ்ரம தருமத்தில் மண்ணை வாரிப் போடு. பாகவத தருமத்துக்கு இழுக்கு ஏற்படுத்திவிட்டாயே நிர்மூடம்! பரம பாகவதரான ஞானசிகரத்தைச் சாதி கருதிப் பழித்துவிட்டாயே.

**நஞ்சம் :** நான் அவரைப் பழித்து ஒரு வார்த்தை கூட மூச்சுவிடவில்லை.

**இரா :** பாகவதர்கள் விஷயத்தில் சாதி வித்தியாசம் பாராட்டுவதே பெரும் பழிப்பாயிற்றே! ''போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதம் அன்றே'' என்ற ஆழ்வாரின் அருள்வாக்கிற்கிணங்க அவர் உண்டு மிஞ்சிய எச்சில் அமுதுக்காக நான் ஏங்கிக் கிடக்கிறேன். நீ அதனை வெறும் எச்சில் என்று அற்பமாக எண்ணிக் கைக்கு எட்டின அமுதை வாய்க்கு எட்டாமல் கொட்டிக் கவிழ்த்து விட்டாயே! இனி நான் என்ன செய்வேன்!

**வழிகாட்டி :** இராமநுஜரின் நீண்ட நெடும் வாழ்க்கைப் பயணத்தில் அன்றையத் தினம் ஒரு மைல் கல்லாக அமைந்து விடுகிறது. சாதி வெறியைக் கடிந்து சமுதாயப் புரட்சி செய்வதற்கு முற்பட்ட கால்கோள் திருநாள் அது. இராமாநுஜர் நேரே திருக்கச்சி நம்பிகள் இருப்பிடத்துக்குச் சென்று, 'ஸ்வாமி, எச்சில் பிரசாதம் அடியேனுக்குக் கிடையாமல் செய்து விட்டீர்களே!'' என்று ஆதங்கப் படுகிறார். நம்பிகள் அவரைத் தேற்றி 6 உபதேசங்கள் செய்கிறார்.

**அர்ச்சகர் :** ஆறாவது உபதேசப்படி அவர் பெரிய நம்பியை ஆசிரியராக அடைய வேண்டியது. பெரிய நம்பிகள் ஆளவந் தாரோட மற்றொரு முக்கிய சிஷ்யர். அப்படியே அவரை அடைய வேண்டி இராமா நுஜர் காஞ்சியிலேருந்து ஸ்ரீரங்கத்துக்குப் புறப்படுகிறார். அதே சமயம் ஸ்ரீரங்கத் திலுள்ள வைஷ்ணவப் பெருமக்கள் வேண்டு கோள்படி இராமாநுஜரை அழைத்து வரப் பெரிய நம்பிகள் காஞ்சிக்குப் புறப்படுகிறார் இருவரும் மதுராந்தகத்திலே உள்ள ஏரி காத்த பெருமாள் சந்நிதியிலே சந்திச்சுக் கொள்றா.

**வழிகாட்டி :** தெய்வானுக்ரகத்தால் ஏற்பட்ட அந்தச் சந்திப்பால் பெரிதும் உவப்படைந்த இளையாழ்வார், நம்பிகள் திருவடியில் சரணடைந்து, தம்மைச் சீடனாக ஏற்றுக் கொள்ளுமாறு விண்ணப்பித்துக் கொள்கிறார். அங்ஙனமே அவர் ஏற்றுக் கொண்டு இராமாநு ஜருக்குப் பஞ்சம்ஸ்காரங்களின் வாயிலாக ஸ்ரீவைணவ உபதேசம் செய்கிறார்.

**பெரிய :** இராமாநுஜரே! நீர் இப்போது உப தேசம் பெறுவது என்னிடமிருந்து அல்ல. யமுனைத் துறைவனாகிய ஆளவந்தாரிட மிருந்துதான் பெறுகிறீர். யமுனைத் துறை

வரே உம்முடைய ஆச்சாரியார். நான் வெறுங் கருவிதான்.

**பாடகர் :** நிதியைப் பொழியும் முகிலென்று
நீசர்தம் வாசல் பற்றித்
துதிகற்றுலகில் துவள்கின்றிலேன்
இனிதூய் நெறிசேர்
எதி ட்கிறைவன் யமுனைத்துறைவன் இணை
அடியாம்
கதி பெற்றுடைய இராமாநுசன்
என்னைக் காத்தனனே!

**அர்ச்சகர் :** பத்தினியோடு வந்திருந்த பெரிய நம்பிகள் சிஷ்யரோடு காஞ்சிக்குப் போய், சிஷ்யர் திருமாளிகை மேல் மாடியிலே தங்குறார். அங்கே ஆறு மாத காலம் தங்கி இராமாநுஜருக்குத் திவ்யப்பிரபந்தப் பாசுரங் களையும், வியாச சூத்திரப் பொருளையும், ஆளவந்தார் தரிசனமான ஸ்ரீவைஷ்ணவ தத்துவ ரகசியங்களையும் போதிச்சு வர்றார்.

**வழிகாட்டி :** ஆச்சாரியர்களின் அத்தகைய போதனைகளும் மனைவியாரால் நேர்ந்த சோதனைகளும் சேர்ந்துதான் இளையாழ் வாரை இராமாநுஜப் பெருமுனியாக உயர்த்தி விட்டன. தஞ்சமாம்பாள் மட்டும் அவ்வாறு

ஏறுக்கு மாறாக அமைந்திரா விட்டால் உலகிற்கு இராமாநுஜப் பெருநிதியம் கிடைத்திருக்க முடியாது. அந்த வகையில் தஞ்சமாம்பாள் ஸ்ரீவைணவ உலகிற்குத் தஞ்சமளித்திருக்கிறார், என்றுதான் பெருமைப்பட வேண்டும். தஞ்சமாம்பாள் இழைக்கும் இரண்டாவது தவறு அவரை மேலும் வைராக்கியமடையச் செய்கிறது.

**இரா :** தஞ்சாம்பா! தஞ்சாம்பா!

**தஞ் :** (உள்ளேயிருந்து)—ஏன்?

**இரா :** கூப்பிட்டால் உடனே வரக் கூடாதா?

**தஞ் :** அதுதான் வந்து கொண்டிருக்கிறேனே!

**இரா :** இங்கே வா. இந்தப் பாகவதருக்குப் பசிக்கிறதாம்....

**தஞ் :** அதுக்கு நான் என்ன பண்றது?

**இரா :** பாவம்! பசியினாலே களைத்துக் கீழே விழுந்து விடுவார் போலிருக்கிறது. இவருக்குக் கொஞ்சம் அன்னம் இடு.

**தஞ் :** (முணுமுணுத்து)—வரவாளுக்கும் போறவாளுக்கும் தளிகை பண்ண இது என்ன சத்திரம் சாவடியா?

**இரா :** என்ன முணுமுணுக்கிறாய்?

**தஞ் :** ஒன்றுமில்லை.

**இரா :** என்ன, ஒன்றுமில்லை?

**தஞ் :** அன்னம் படைப்பதற்கு ஒன்றும் இல்லை என்றேன்.

**இரா :** ஏன் ஒன்றுமில்லை?

**தஞ் :** இன்னும் தயாராகவில்லை.

**இரா :** அப்படியானால் பழைய அமுது இருந்தால் பரிமாறு.

**தஞ் :** அதுவும் இப்போ இல்லை. அதுதான் ஒன்றுமில்லையென்று முதலிலேயே சொன்னேனே.

**அர்ச்சகர் :** மனைவி பேச்சிலே அவருக்கு நம்பிக்கை இல்லை. மனைவியை ஒரு காரியார்த்தமாக வெளியே அனுப்பிவிட்டுச் சமையல் அறைக்குள் புகுந்து சோதனை போட்டுப் பார்க்கிறார். ஒரு பாத்திரம் நிறையப் பழஞ்சோறு இருப்பது கண்டு திடுக்கிடுகிறார். தஞ்சமாம்பாள் வந்ததும் பாகவதருக்கு இரங்காத நிஷ்டூரத்திற்காகவும்,

தம்மிடம் பொய் சொல்லியதற்காகவும் வன்மையாகக் கடிந்து கொண்டு இதுவே கடைசி முறையாக இருக்கட்டும் என்று எச்சரிக்கை செய்கிறார்.

**வழிகாட்டி :** ஆனால் அந்த இறுதி எச்சரிக்கையும் பயனளிக்கவில்லை. சில நாட்களில் மனைவியார் மூன்றாவது தவறும் புரிந்து விடுகிறார். அது எல்லாத் தவறுகளுக்கும் சிகரமாக அமைந்துவிடுகிறது. தஞ்சமாம்பாள் பெரிய நம்பிகளின் இல்லக் கிழத்தியாருடன் கிணற்றடியில் சண்டையிட்டு அதன் விளைவாய்ப் பெரிய நம்பிகள் சீடரிடம் சொல்லிக் கொள்ளாமலே மனைவியாருடன் திருவரங்கத்திற்கு விரையும்படி செய்து விடுகிறாள். வெளியே சென்றிருந்த இராமாநுஜர் வீடு திரும்பியதும் தம் குருநாதரைக் காணாமல் கலவரத்துடன் விசாரிக்கிறார்.

**இரா :** எங்கே குருதேவரைக் காணவில்லை?

**தஞ்சம் :** யாருக்குத் தெரியும்?

**இரா :** மறுபடியும் பொய் சொல்கிறாயா ?

**தஞ்சம் :** நான் எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்? சம்சாரத்தை அழைத்துக் கொண்டு ஊருக்குப் போயிருப்பார்.

**இரா :** என்ன, ஊருக்குப் போய் விட்டாரா? என்னிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் எதற்காக அவ்வளவு அவசரமாகப் புறப்பட்டு விட்டார்?

**தஞ்சம் :** எல்லாம் என்னிடம் சொல்லிக் கொண்டார்கள்!

**இரா :** எவ்வளவு அழுத்தமாகப் பேசுகிறாய்? அவர்களாகப் போயிருக்க மாட்டார்கள்! நீதான் விரட்டி அடித்திருப்பாய்!

**தஞ்சம் :** நான் எதற்காக விரட்டியடிக்க வேண்டும்?

**இரா :** பின் என்னதான் நடந்தது? உள்ளதைச் சொல்.

**தஞ்சம் :** வேறொன்றும் பெரிதாய் நடந்து விடவில்லை. நானும் அந்தப் பெரியவர் சம்சாரமும் கிணற்றில் நீர் இறைத்துக் கொண்டிருந்தோம். அப்போ பாருங்கோ, அந்த அம்மாள் குடத்து நீர் நம்ம குடத்திலே தெறித்து விழுந்தது!

**இரா :** விழுந்தால் என்ன?

**தஞ்சம் :** அது தீட்டு இல்லையா?

**இரா :** முகரைக்கட்டை ! தீட்டாவது மண்ணாங் கட்டியாவது! ஒரே குலத்தில் கூடவா தீட்டு அனுசரிக்கிறாய் ?

**தஞ்சம் :** இருக்கட்டுமே. அந்தஸ்திலும், செல்வத்திலும், குலங் கோத்திரத்திலும் குறைந்தவர்கள் அல்லவா அவர்கள் ?

**இரா :** (தலையிலடித்து) - நாராயணா ! நாராயணா ! என்ன உன் புத்தி இப்படிப் போகிறது ? அதற்காகக் குடத்து நீரை அவர்கள் தலையில் கொட்டிவிட்டாயா?

**தஞ்சம் :** இல்லை. கரையில் தான் கொட்டினேன். 'ஏனம்மா ஆச்சாரியார் பத்தினி என்கிற ஆணவமா உனக்கு? என்று ஒரு வார்த்தை கேட்டு விட்டேன்.

**இரா :** ஒரு வார்த்தைதான் கேட்டாயா?

**தஞ்சம் :** ஆத்திரத்தில் என்னென்னமோ பேசிட்டேன் போலேருக்கு. அந்த அம்மாள் முதலைக் கண்ணீர் வடித்துக் கொண்டு குடத்தைத் தூக்கிக் கொண்டு போயிட்டார். (பெருமையாக) ஆச்சாரியார் அந்த அம்மாளைத்தான் கோவித்துக் கொண்டார்.

**இரா :** அபசாரம் ! அபசாரம் !

**தஞ்சம்:** (நடித்து) 'இனி இங்கே தங்கினால் இப்படித்தான் அடிக்கடி விபரீதம் உண்டாகும். அதனாலே நாம் பாகவத அபசாரத்துக்கு ஆளாக வேண்டியது நேரிடும். சீடருக்கு இந்தச் செய்தி தெரியுமுன்னே நாம் சீரங்கம் புறப்படுவதுதான் சிலாக்கியம்' அப்படின்னு சொல்லி அவசர அவசரமாகக் கிளம்பிப் போய் விட்டார்கள்!

**இரா:** ஐயோ! இதைக் கேட்டு என் உடம்பெல்லாம் பற்றி எரிகிறதே! நீ எப்படிப் பதட்டப்படாமல் நிற்கிறாய்! நான் எவ்வளவோ எச்சரிக்கை பண்ணியும் மறுபடியும் பாகவத அபசாரம் செய்து விட்டாயே! இனி உனக்கும் எனக்கும் ஒத்துக் கொள்ளாது நீ உன் பிறந்தகம் செல்லலாம்.

**அர்ச்சகர்:** 'சற்றே ஏறுமாறாக நடப்பாளே யாமாகில் கூறாமல் சந்யாசம் கொள்'-என்பதற்கிணங்க இராமாநுஜர் அன்னிக்கே சந்யாசம் வாங்கிக்கொள்றார். முப்பதாவது வயதிலேயே உலகத்துக்காக மனையாளையும், மனையையும் துறக்கிறார். வரதராஜப் பெருமாள் சந்நிதியிலே தூய காவியாடை உடுத்து, மனம், வாக்கு, காயம் என்கிற மூன்றையும் கட்டுப் படுத்தினதுக்கு அடையாளமா திரிதண்டம்

ஏந்தித் துறவியாகி ஞான சூரியன் போலே வெளியே வர்றார்.

**வழிகாட்டி :** அந்த இளந்துறவியைக் கண்ட திருக்கச்சி நம்பிகள் 'யதிராஜா!' என்று கூவி உணர்ச்சிப் பரவசமடைகிறார். முக்கோல் என்னும் செங்கோல் தாங்கி ஸ்ரீரங்க சாம்ராஜ்யத்தையும், பகவத் சாம்ராஜ்யத்தையும் ஆளவந்தார், அந்த ஆளவந்தாரின் அபிமான சீடர்.

**அர்ச்சகர் :** ஆளவந்தாருக்குப்பின்னே ஸ்ரீவைஷ்ணவ குருபீடத்தை இராமாநுஜர் அலங்கரிக்க வேணுமல்லவா? குருவுக்கேத்த சீடர் குழாத்தை அவர் உருவாக்கத் தொடங்குறார் முதல் முதலாத் தன் சிற்றன்னை மகன் கோவிந்தப் பட்டரையும், சகோதரி மகன் முதலியாண்டானையும் சீடராக்கிக் கொள்றார். முதலியாண்டான் இராமாநுஜரை விட்டுப் பிரிவதே இல்லை. அதனாலே அவரைச் சுவாமிகள் தன் திரிதண்டமா பாவிச்சுவர்றார். அப்படியே கூரத்தாழ்வான் என்கிற பரம பக்தரும் முக்கிய சீடராகிறார்.

**வழிகாட்டி :** கூரேசர் காஞ்சிபுரத்துக்கு அணித்தே உள்ள கூரம் என்ற கிராமத்தைச் சேர்ந்தவர். மன்னவராகவும் வள்ளலாகவும்

வாழ்ந்தவர். சகல சாஸ்திர பண்டிதர். வயதிலும், ஞானத்திலும் சீலத்திலும் இராமாநுஜரையும் விஞ்சியவர் என்ற பெரு மதிப்பிற்குரியவர். ஏகசந்தக்கிராஹி! பவகத் பக்தி, பாகவத பக்தி, குருபக்தி, ஜீவ காருண்யம் முதலான நற்பண்புகள் படைத்த வர். இராமாநுஜர் மீதுள்ள பரம பக்தியும் அவர் நல்லுபதேசமும் அவரைத் தேடிச் சென்று அவர்க்குச் சீடராகி அடிபணிந்து வாழத் தூண்டுகின்றன. அவர் தம் செல்வத்தையெல்லாம் ஏழை எளிய மக்களுக்கு வாரி வழங்கி விட்டு இராமாநுஜரை அடையக் காஞ்சி நகர் நோக்கிக் கால் நடையாகப் புறப் படுகிறார். அவர் மனைவி தவத்திரு ஆண்டாளும் நிழல்போல் பின் தொடர் கிறாள். இருவரும் ஒரு காட்டு வழியைக் கடந்து செல்கிறார்கள்.

**ஆண்டாள் :** சுவாமி, இங்கே திருடர் பயம் உண்டோ ?

**கூரத்தாழ்வார் :** மடியிலே கனமிருந்தால் அல்லவா வழியிலே பயப்படவேண்டும்.

**ஆண்டாள் :** ஆம். என் மடியிலே கனம் இருக்கத்தான் செய்கிறது.

**கூரத் :** (புரியாமல்) — என்ன ?

**ஆண்டாள் :** ஆமாம், சுவாமி! ஒரு பொன் வட்டில் கொண்டு வருகிறேன்.

**கூரத் :** ஏனம்மா, இந்தப் பொன் வட்டிலை மட்டும் எடுத்து வருகிறாய் ?

**ஆண்டாள் :** தாங்கள் பொன் வட்டிலில் மட்டுந்தானே சாப்பிட்டுப் பழக்கம்.

**கூரத் :** ஓ ! அதனால் கொண்டு வருகிறாயா ? (சிரித்து) சாப்பாட்டைப் பற்றியே கவலைப் படாமல் வருகிறோம். நீ சாப்பாட்டுப் பாத்திரத்தின் மேல் அக்கறை கொள்கிறாயே! கொண்டா அந்தப் பொன் வட்டிலை.

**ஆண்டாள் :** இந்தாருங்கள்.

**கூரத் :** இதுதானே உன் பயத்துக்குக் காரணம்? இப்பொழுதே இதைக் தூரத்தில் வீசி எறிந்து விடுகிறேன். (தட்டு விழும் ஒலிக்குறி) பார்த்தாயா உன் அச்சமும் அத்துடன் ஓடிப் போய் விட்டது.

**அர்ச்சகர் :** அப்பேர்ப்பட்ட பற்றற்ற பரம பக்தரைச் சீடரா அடைஞ்சதனாலே உடையவர் புகழ் பல மடங்கு அதிகரிக்கிறது.

அதனாலே கூரத் தாழ்வானைச் சுவாமிகள் தன் பவித்திரமா மதிச்சுப் போற்றி வர்றார்.

**வழிகாட்டி :** பெரிய நம்பிகள் தம்மிடம் உபதேசம் பெற்றபின் சுவாமிகளைத் திருக்கோஷ்டியூர் நம்பிகளின் திருவடிச் சம்பந்தம் பெற்றுப் பயனடையுமாறு பணிக்கிறார். திருக்கோஷ்டியூர் நம்பிகளும் ஆளவந்தாரின் அரும்பெரும் சீடர்களில் ஒருவர். சுவாமிகள் அவரைத் தேடிச் சென்று 'சுவாமி, அடியேனுக்குத் திருமந்திரத்தையும் அதன் உட்பொருளையும் அறிவித்தருள வேணும். பெரிய நம்பிகள் தமியேனைத் தங்களிடம் அனுப்பிவைத்தார்' என்று விண்ணப்பித்துக் கொள்கிறார். ஆனால் அவர் பதில் ஒன்றும் கூறாமல் பாரா முகமாய் இருந்து விடுகிறார். மறுநாளும் காலட்சேப மண்டபத்துக்குச் சென்று பிரார்த்தித்துக் கொள்கிறார். அப்பொழுதும் அலட்சியப் படுத்தி விடுகிறார். இவ்வாறு சில நாள்கள் விடாமல் முயன்று பார்த்து விட்டுத் திருவரங்கத்துக்குத் திரும்பிப் போய் விடுகிறார்.

**அர்ச்சகர் :** திருமந்திரம் என்கிற வைஷ்ணவ மந்திரத்தை அறிந்து கொள்ள வேணுமுங்கிற

காதலினாலே சுவாமிகள் பொறுமையோ, நம்பிக்கையோ இழந்துடலை. ஸ்ரீரங்கத்துக்கும் திருக்கோஷ்டியூருக்கும் உள்ள தூரம் 170 கி. மீ. அவ்வளவு தூரத்தையும் சுவாமிகள் பாத யாத்திரையாகவே போய்த் திருக்கோஷ்டியூர் நம்பிகளைச் சந்திச்சுத் திரும்புவார். இப்படி ஒரு வருஷ காலமா 18 தடவைகள் நம்பி, சுவாமிகளை அலையவிட்டு அலைக் கழிக்கிறார். திருக்கோஷ்டியூர் செளமிய நாராயணன் கோயில் சந்நிதியில் ஒரு மாசம் உபவாசம் இருக்கச் செய்யிறார். தாங்க முடியாத சோதனைக்கெல்லாம் உள்ளாக்கின பிறகு சுவாமிகளைத் தண்டு பவித்தரங்களோட வந்து உபதேசம் பெற்றுப் போகும்படி அனுக்ரகிக்கிறார்.

**வழிகாட்டி :** அளவற்ற மகிழ்ச்சியடைந்து கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் அழைத்துக் கொண்டு போய் நம்பிகளின் திருவடியில் வீழ்ந்து இறைஞ்சுகிறார்.

**திருக் :** (அதிர்ந்து)—என்ன! உம்மைத் தண்டு பவித்திரத்துடன் தனியாக அன்றோ வரச் சொல்லியது.

**இரா :** அடியேன் அப்படித்தானே வந்திருக்கிறேன்!

**திருக்:** என்ன, இப்படிச் சொல்கிறீர்? தனியாக என்று இவர்கள் இருவரையும் அழைத்து வந்திருக்கிறீரே!

**இரா:** சுவாமி! இவர்களே என் தண்டும் பவித்திரமும். என் மருமகன் முதலியாண்டான் தான் எனக்குத் தண்டம். அந்தரங்கச் சீடன் கூரத்தாழ்வான்தான் என் தர்ப்பை மோதிரப் பௌத்திரம்.

**திருக்:** (தமக்குள்) ஆஹா! எவ்வளவு உயர்ந்த உள்ளம்! பரந்த பண்பாடு! (வெளிப்படையாக) நல்லது. நான் இப்போது உபதேசிப்பது உங்கள் மூவருக்கும்தான். வேறு எவருக்கும் சொல்லிவிடக் கூடாது.

**இரா:** ஆக்ஞை ஸ்வாமி.

**திருக்:** நான் ஆளவந்தார் ஞான புத்திரனாக இருந்து இந்தத் திருமந்திரப் பொருளை வெகு சிரமத்தின் பேரில் கற்றுக் கொண்டேன். இந்த மகத்தான பொருள் இன்றளவும் குரு சிஷ்யர் கிரமமாகத்தான் வந்திருக்கிறது. அதனால் நீரும் இதனைப் பரம ரகசியமாகவே வைத்துக் கொண்டு பாத்திரமறிந்து பக்குவமாக வழங்க வேண்டும்.

**இரா :** அங்ஙனமே செய்கிறேன் சுவாமி ...

**திருக் :** வெறுமனே சொன்னால் போதாது, நம்மைத் தொட்டு ஆணையிட வேண்டும்.

**இரா :** ஆணையிட்டுச் சொல்கிறேன் ஸ்வாமி.

**திருக் :** குருவின் ஆணையை மீறினால் நரகத் தண்டனைதான் கிடைக்கும் தெரியுமா?

**இரா :** தெரியும்.

**வழிகாட்டி :** கடுமையான நிபந்தனைகளுடன் அந்த மகாமந்திரப் பொருளைத் திருக் கோஷ்டியூர் நம்பிகள் உடையவருக்கு உபதேசம் செய்கிறார். அந்த அரும்பொருளை அறிந்து கொண்ட சுவாமிகள் ஆனந்த பரவச மடைகிறார்.

**இரா :** (தமக்குள்) ஆஹா! எம்பெருமானை அடையும் நெறி இவ்வளவு அழகாகவும் எளிதாகவும் இருக்கிறதே! பேரழகனான இறைவன் இவ்வளவு சௌலப்பியனாகவும், சௌசீல்யனாகவும் அடியார்க் அடியனா கவும் இருக்கிறாரே! இதனை இதுவரை அறியாமல் போனேனே! (குருநாதரிடம்) ஸ்வாமி! நான் தன்யனானேன்!

**திருக்:** (மகிழ்ச்சியுடன்)—ஞானப் புதல்வரே! இனி உமக்குக் குறை ஒன்றும் இல்லை. உம்மால் உலகம் உய்ந்துவிடும்.

**இரா:** (தனக்குள்) அடாடா! இதை அறிந்து கொள்வதற்கு எத்தனை பாடுகள். எத்தனை சோதனைகள். ஒரு சிரமமாவது இப்பொழுது தெரியவில்லையே, எனக்கு! ஆ! இந்தப் பேரானந்த பூதிக்காக எத்துணை சிரம மானாலும் படலாமே! ஆனால் இத்துணை சிரமங்களையும் தாங்கிக் கொண்டு இதனை அறிந்து கொள்ள எத்தனை பேர் முன் வரு வார்கள்?

**வருணனை:** இரவு முழுவதும் ஒரே சிந்தனை! 'இனி உலகம் உம்மால் உய்ந்துவிடும்' என்று குருநாதர் நியமித்தாரே, அப்படியானால் 'இது வேறு யாருக்கும் தெரியக் கூடாது' என்று ஏன் தடை விதித்தார்? பகவத் விஷயம் ஏன் பாதுகாக்கப்பட வேண்டும்? பகவான் பாவிகளுக்குத் தானே தேவைப்படுகிறான்? பாகவத சேவைதானே பகவத் கைங்கரியம்! உலகம் உய்ய வேண்டுமானால் இந்த உண்மைப் பொருளை நான் ரகசியமாக வைத்திருக்க முடியாது, என்றெல்லாம் சிந்தித்து ஒரு முடிவுக்கு வருகிறார். அதுவரை

எவரும் கனவில் கூட நினைத்தறியாத காரியத்தைப் புரட்சிகரமாகச் செய்யத் தீர்மானிக்கிறார். அதன் மூலம், ஞானச் செல்வர்களுக்கும், வேதாந்த வாதிகளுக்கும் மாத்திரமே அறிவித்து வந்த எல்லையைக் கடந்து சாதி, சமய, ஏழை, செல்வ, படித்த, பாமரப் பாகுபாடின்றி அனைவரும் அறிந்து கடைத்தேறும் மக்கள் இயக்கமாக மாற்றி ஒரு புதிய சகாப்தத்தை ஏற்படுத்துகிறார். கருணைக் கடலான இளையபெருமாள். அது தான் ஒப்பரிய இராமாநுஜ சகாப்தம்.

**அர்ச்சகர் :** மறுநாள் பொழுது விடியறது. இன்னிக்குத் திருக்கோஷ்டியூரிலே திருவிழாக் கோலம். விழா காணத் திரளான கூட்டம். அந்தக் கோலாகலக் கூட்டத்தைக் கண்டதும் சுவாமிகளுக்கு ஒரே கொண்டாட்டம். கோபுரத்து மேலே அவர் ஏறுகிறார். அங்கே நின்றபடியே, அவர் அரும்பாடு பட்டுத் தெரிஞ்சுண்ட 'ஓம் நமோ நாராயணாய மகா' மந்திரத்தையும், அர்த்த விசேஷங்களையும் எல்லார் காதிலேயும் விழும்படியா முழங்க ஆரம்பிச்சுடுறார்.

**ராமா :** ஓம் நமோ நாராயணாய ...

**வழிகாட்டி :** திருக்கோஷ்டியூர் நம்பிகளுக்குக் கடும் சீற்றம். உடனே இ ர ா ம நு ஜ ை ர வரவழைத்து விசாரிக்கிறார்.

**திருக் :** உங்கள் மூவரைத் தவிர வேறு யாருக்கும் தெரிவிப்பதில்லை. என்று குருவின் மீது ஆணையிட்டுச் சொன்னீரல்லவா?

**ரா** ஆமாம், சுவாமி!

**திருக் :** இப்போது ஊ ர ா ரு க் கெ ல் ல ா ம் தெரிவித்து விட்டீரே !

**இரா :** யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம், என்ற கொள்கை என்னை உந்தித் தள்ளியது.

**திருக் :** ''ஊருக்கெல்லாம் கூறி
உமக்கு என் பெற்றீர்?''

**இரா :** நரகம் பெற்றேன்.

**திருக் :** (அதிர்ந்து) - என்ன !

**இரா :** ஆம் சுவாமி அழியாத நரகம் பெற்றேன். குருநாதர் ஆணையை மீறிய தண்டனையை அடியேன் அறிவேன்.

**திருக் :** அறிந்துமா இப்படிச் செய்தீர்?

**இரா :** வேண்டுமென்றேதான் செய்தேன்.

**திருக் :** வேண்டுமென்றே குருத் துரோகம் புரிந்தீரா?

**இரா :** மன்னித்தருள வேண்டும், ஸ்வாமி! வேறு வழி புலப்படவில்லை. பிறர் நலத்துக்காகச் சுய நலத்தை அழித்துக் கொண்டேன்.

**திருக் :** மன்னுயிருக்காகத் தன்னுயிரை மாய்த்துக் கொள்கிறீரா?

**இரா :** இதனால் அடியேன் ஒருவன் மட்டுந் தானே நரகத்தில் உழல்வேன்? ஆனால் இத்தனைக் கோடி மக்களும் தங்கள் திருவருளால் மோட்ச சாம்ராஜ்யம் பெறுவார் களே! அதுவே அடியேனுக்குப் பரமானந்தப் பரமபதம் அல்லவா!

**பாடகர் :** நான் ஒருவனுமே அன்றோ
நசிப்பது, இத்திரள்கள் எல்லாம்
ஆனவரன் பேரின்பத்தை
அருந்துமே அந்தோ!

**திருக் :** (உணர்ச்சிப் பெருக்குடன்) ஆஹா.....நீர் மிகப் பெரிய மனிதர் ஐயா! நீர் நரகத்தையும் சொர்க்கமாக்கிவிடுவீர். உமக்கு ஏது நரக வாசம்! எம்போலியர்க்குத்தான் அது உரியது.

உம்முடைய விரிந்தநோக்கும் பரந்த உள்ளமும் எமக்கெல்லாம் கொடுத்து வைக்கவில்லையே! நீரே எம்பெருமானார்.

**இரா:** ஸ்வாமி, அடியேன் அதற்குத் தகுதி யற்றவன்.

**திருக்:** உமது தகுதிக்கு ஒப்பார் எவரும் இல்லை இந்த வைஷ்ணவ தரிசனம் இதுவரை பரம வைதிக சித்தாந்தமென்று பெயர் பெற்றிருந்தது. ஆனால் நீர் இன்று புதுயுகம் தொடங்கிவிட்டீர். அதனால் அது இன்று முதல் எம்பெருமானார் தரிசனம் என்று வழங்கட்டும்.

**ஸ்ரீகோஷ்டி:** அன்று தொடங்கியது இராமாநுஜ தரிசனம். அன்று திருக்கோஷ்டி யூருக்கு மட்டுமா திருநாள்? மனித குலத்துக்கே மாபெரும் திருநாளாயிற்றே!

**அர்ச்சகர்:** இளைய பெருமாள் எம்பெரு மானாரான திவ்யமங்களத் திருநாள்.

**ஸ்ரீகோஷ்டி:** ஆத்மாவுக்காக உலகத் தியாகம் செய்துவிடலாம், என்பது பழைய வேதாந்த விதி. ஆனால் அந்த விதிக்கும் விதி செய்து விடுகிறார், எம்பெருமானார். அவர் கண்ட

அருள் நெறி உலகத்துக்காக ஆத்மாவையும் தியாகம் செய்யலாம் என்று வழிகாட்டுகிறது. வேத காலந் தொட்டு வழிவழியாக வளர்ந்து வரும் ச நா த ன தருமத்திலே, தன்னுயிரைக் கொண்டு தான் பிழைத்துக் கொள்ளும் ஒரே கொள்கைதான் நிலவி வந்தது. முன்னோர் வகுத்த அந்த முது நெறியை முறியடித்து மன்னுயிருக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்ய முன் வந்த இராமநுநுஜப் பெரு முனியின் தியாக உள்ளமும், தாயன்பும், தனிப் பெருங்கருணையுமே அவருடைய செயற்கரும் செயல்கள் அனைத்திற்கும் ஆ தா ர மா க இருந்து வந்திருக்கின்றன. அதுவே ஆச்சாரிய பரம்பரையில் இவரை நடுநாயகமாக ஒளிரச் செய்து வருகிறது. ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் மூழ்கித் திளைத்த காரணத்தால் நிகழ்த்திய அரும் பெரும் சாதனை அது. அதனால் நம்மாழ்வாரை ஸ்ரீவைஷ்ணவத்தின் முதல் தாய் என்றும், எம்பெருமானாரை இதத் தாய்— அதாவது வளர்ப்புத்தாய் என்றும் உலகம் பாராட்டுகிறது.

**அர்ச்சகர்**: திருவாய் மொழிக்கு வியாக்கி யானம் திருமலை ஆண்டானிடம் கேட்டுத் தெளிகிறார். பெரிய நம்பிகளே திருப்பாவை ஜீயர்னு பட்டம் சூட்டுற அளவுக்கு அவர்

ஆழ்வார் பாசுரங்களில் ஊறிப் போனவர். பாசுரங்களோட சொல்லும் பொருளுமா வாழ்க்கை நடத்துறவர். ஆளவந்தார் அருமைப் புதல்வர் திருவரங்கப் பெருமாள் அரையர் கிட்டே கைங்கரியம் பண்ணிப் பஞ்ச மோபாய நிஷ்டை உபதேசமும் பெறுகிறார்.

**வழிகாட்டி** : சுவாமிகள் ஆளவந்தார் சீடர்கள் அனைவரிடமும் கைங்கரியம் பண்ணி உபதேசம் பெற்று. ஆளவந்தாரின் ஆதர்ச சீடர் என்னும் பெருமைக்குப் பாத்திரமாகிறார். ஆளவந்தாரின் வாரிசாகத் திருவரங்கப் பெருங் கோயிலின் கைங்கரியப் பொறுப்பையும் நிருவாகப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு நல்ல பல சீர் திருத்தங்கள் புரிகிறார். இதனால் வெறுப்பும் எதிர்ப்பும் வெகுவாக ஏற்படுகின்றன. பயமுறுத்தல்களும் கொலை முயற்சிகளும் கூட நடக்கின்றன. பெரிய பெருமாள் திருமுன்னே தீர்த்தவாரி நடைபெறும்போது விஷத் தீர்த்தம் சாதிக்கப் பெறுகிறது. எதிராஜர் பிரசாதம் யாசித்து வரும் வீதியில் திட்டமிட்டு நஞ்சு உணவு வழங்கப் படுகிறது. ஆனால் அவற்றிலிருந்தெல்லாம் தம்மிடமுள்ள தெய்வீக சக்தியால் தப்பித்துக் கொள்கிறார். அதாவது மனித

சக்தியைத் தெய்வீக சக்தியாக மாற்றிய மகானுபாவர் அவர்.

**அர்ச்சகர் :** மனித சக்தியால் அரும்பெரும் சாதனைகள் நிகழ்த்தலாமென்று நிரூபித்தவர் சுவாமிகள் அவர் உடல் உழைப்பை இழிவா மதிக்கிறதில்லை. எந்தத் தொழிலும் இறைவன் கைங்கரியத்தைக் காண்ற தீர்க்க தரிசனம் அவருடையது.

**வழிகாட்டி :** ஒரு சமயம் சுவாமிகள் பெரிய நம்பியின் புதல்வி அத்துழாய் நங்கை சீதன வெள்ளாட்டிக்குப் பதில் முதலியாண்டானை அனுப்பி வைக்கிறார். முதலியாண்டான் அவருடைய சொந்த மருமகன். சிறந்த கல்விமான். தனவந்தர். எல்லாவற்றிற்கும் மேலாக அவர் சுவாமிகளின் திரிதண்டத்தைப் போன்றவர். இத்துணைச் சிறப்பியல்புகளை யுடையவர் ஆசானின் நியமனப்படி அத்துழா யின் புக்ககத்தில் சிறிது காலம் பணிப் பெண்ணாக வேலை செய்து வருகிறார். அந்த அனுபவமும் பயிற்சியும் தமக்குக் கிடைத்த தைப் பெரும் பேறாகக் கருதுகிறார். வைணவர்களுக்காக எத்தகைய கைங் கரியமும் செய்யச் சித்தமாக இருந்த அவர் சமையல் தொழிலைக் கூட இழிவாக மதிக்க

வில்லை. "பணிகளையெல்லாம் அன்பர் பணியாகவும் ஆண்டவர் பணியாகவும் கருதிச் செய்ய வேண்டும்" இது— இளையாழ்வார் அவருக்குக் கற்றுக் கொடுத்த இனிய பாடம். அது முதல் முதலியாண்டான் 'வைணவதாசன்' என்று போற்றப் பெறுகிறார்.

**அர்ச்சகர் :** பாகவத கைங்கரியத்துக்கு ஈடு இணையே கிடையாது. மாறனேர் நம்பி ஆளவந்தார் அபிமான சீடர்களில் ஒருவர், திருக்குலத்தார் என எதிராஜராலே அழைக்கப் பட்ட அரிஜன வகுப்பைச் சார்ந்தவர். ஆசானோட ராஜ பிளவை நோயை ஏத்துக்க ஒருத்தரும் முன் வராதபோது இவரே அதை வரப்பிரசாதமா நினைச்சு ஏத்துக்கிட்டவர். ஆசான் படவேண்டிய நோய் உபாதையைத் தான் அனுபவிக்கிறதிலே இன்பம் காணற பரிபக்குவம் உடையவர். அவர் ஒரு நந்தவனக் குடிசையிலே வசிச்சு வர்றார். பெரிய நம்பிகள் தினமும் அவர் குடிசைக்குப் போய் அவருக்குப் பணிவிடை செஞ்சு, தீர்த்தம் வைத்து, அமுது செய்வித்து வருவார். அந்த அரிய கைங்கரியத்தைக் கண்டதும் எம்பெருமானார் உருகிவிடுகிறார்.

**வழிகாட்டி :** மாறனேர் நம்பி காலமானதும் பெரியநம்பிகள் அவருக்கு அந்திம சமஸ்காரம்

பண்ணி நல்லடக்கம் செய்கிறார். தாழ்ந்த குலத்தவருக்கு அந்திம கிரியை நடத்திய காரணத்தால் ஆத்திரம் அடைந்த திருவரங்கத்தார், அவர் வீட்டு வாசலில் முட்களைப், போட்டு அடைத்து யாரும் அவர் இல்லத்துக்குப் போகாமலும், அவரை எவர் இல்லத்துக்கும் வரவிடாமலும் விலக்கிவைத்து விடுகிறார்கள். அப்போது சீரங்கநாதருக்குத் தேர்திருவிழா சமயம். திருத்தேர் பெரியநம்பி வசிக்கும் வீதி வழியே வந்து அவர் வீட்டு வாசலை நெருங்குகிறது. உடனே பெரிய நம்பி குமாரி, அத்துழாய் நங்கை அரங்கன் மீது ஆணையிட்டுத் தேரை மறித்துக் கொள்கிறாள்.

**அத்துழாய்** : எம்பெருமானே, நீ ஆடு மேய்க்கும் சிறார்களோடு ஒன்று கலந்து உணவருந்த வில்லையா ? தாழ்ந்த வகுப்பினர் என்று ஒதுக்கப்பட்டிருந்த திருப்பாணாழ்வாரை அங்கீகரித்து அருகில் அமர்த்திக் கொள்ள வில்லையா ? அது போல் மாறனேர் நம்பிக்கு என் தந்தையார் செய்த அந்திம சமஸ்காரத்தை நீ அங்கீகரித்தாயா ? இல்லையா ? இந்த ஊரிலுள்ளவர்கள் எங்களை விலக்கி வைத்தார்களே!

அவர்களுக்கு எது சரியென்று நீ உணர்த்திய பிறகுதான் தேர் நகர வேண்டும்.

**அர்ச்சகர் :** அத்துழாய் அம்மை அப்படி ஒரு சத்தியாக்ரகம் பண்ணியதும், அர்ச்சகர் மேலே ஆவேசம் வந்து, பெரியநம்பியை விலக்கி வச்ச கோஷ்டித் தலைவரைப் பார்த்து, ''பெரிய நம்பிகள் மாறனேர் நம்பிக்கு இறுதிக் கைங்கரியம் செஞ்சதுக்காகப் பெருமாள் உகந்தருளினார். நீர் பெரிய நம்பிகளை உமது தோளில் தூக்கிக் கொண்டு வரவேணும். இது பெருமாள் கட்டளை'' அப்படின்னு சொல்றார். அந்தப்படியே செய்து பெரிய நம்பிக்கு மாலை மரியாதை நடக்கிறது.

**வழிகாட்டி :** எம்பெருமானே இந்த லீலா விநோத நிகழ்ச்சியைச் சுவாமிகள் தம் திருமடத்தில் அடிக்கடி நினைவூட்டுவது வழக்கம். எந்தக் குலத்தவராயினும் பாகவதர்கள் வழிபடத் தகுந்தவர்களே. அவரைப் புலையர் என்று பழிப்பவர் தாமே புலையராகிவிடுகிறார். இந்த பாகவதப் பெருந் தத்துவத்தைச் சுவாமிகள் தம் வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்து ஒழுகி வருகிறார். அதனால்தான் திருவரங்கத்

தமுதனார் 'இராமாநுஜரை அடைந்த பாகவதர்கள் நல்லோர்' என்று பாடிப் பரவுகிறார்.

**பாடகர் :** திக்குற்ற கீர்த்தி இராமாநுசனை என்
செய்வினையாம்
மெய்க்குற்றம் நீக்கி விளங்கிய
மேகத்தை மேவும் நல்லோர்
எக்குற்றவாளர், எது பிறப்பு,
ஏதியல்பு ஆக நின்றோர்
அக்குற்றம், அப்பிறப்பு, அவ்வியல்பே
நம்மை ஆட்கொள்ளுமே!

**அர்ச்சகர் :** சுவாமிகளோட இந்தச் சித் ராந்தந்தான் தாழ்ந்தவர்களை யெல்லாம் உயர்த்துறதுக்கு மூல காரணம். வேடுவன் உறங்காவில்லியைப் பிள்ளை உறங்காவில்லி தாசரா மாத்தினது இருக்கிறதே, அது மறக்க முடியாத சாதனை.

(திருவிழாவைக் குறிக்கும் பின்னணி)

**இரா :** குழந்தைகளே, உங்களுக்கு எந்த ஊர்? எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்?

**உறங்கா :** சாமி! நான் இருக்கிறது திருவெள்ளறைங்க. என்னை உறங்கா வில்லின்னு அல்லாரும் கூப்பிடுவாங்க. உறையூர்லே அகளங்க சோழ ராஜாகிட்டே

மெய்ச்காப்பாளனாச் சேவகம் செஞ்சு வர்றேனுங்க. இவ எம் பொஞ்சாதி பொன்னாச்சிங்க. அதான் இட்டுக்கிட்டு வந்தேன்.

**இரா:** நடுத் தெருவில் மனைவிக்கு நடை பாவாடை விரித்து, குடை பிடித்து அலுங்காமல் நலுங்காமல் அழைத்து வருகிறாயே! பார்ப்பவர்கள் பரிகசிப்பார்களே, என்று வெட்கம் ஏற்படவில்லையா, உனக்கு?

**உறங்கா:** இதுலே இன்னா வெக்கம் வந்துதுங்க? இவ கண் அழகு என் கண்ணை மறைச்சுப்பிடுதுங்க. இவ்வளவோ அழகான பொண்ணை எங்க வேடர் சனத்திலேயும் சரி, மத்தவங்க இனத்திலேயும் சரி, பாக்க முடியாதுங்க. இவளுக்குப் பணிவிடை செய்யறதுக்குக் குடுத்து வைக்கணுங்க. இவ கண் தானுங்க எனக்கு உலகம்.

**இரா:** இதைவிட மேலான உலகம் இருக்கிறது, அப்பனே!

**உறங்கா:** என்னாங்க! சாமி! இவ கண்ணை விட அழகான கண் இருக்குதுங்களா?

**இரா:** இருக்கிறது. இருக்கிறது.

**உறங்கா** : எங்கே ருக்குது?

**இரா** : வா....காட்டுகிறேன்.

**வழிகாட்டி** : சுவாமிகள் உறங்காவில்லியை அழைத்துச் சென்று அரங்கத்தில் துயிலும் அந்தச் செந்தாமரைக் கண்ணன், செங்கனி வாய்ச் செல்வன், கண்ணழகன், வாயழ கனாகிய அழகிய மணவாளனைக் காட்டு கிறார். அந்த ஜெகன்மோகன செளந்தரியப் பிழம்பை உறங்காவில்லி வைத்த விழி வாங்கா மல் பாதாதிகேசம் பார்த்துப் பரவசமடை கிறான்.

**உறங்கா** : அட எஞ்சாமி...இந்தக் கொள்ளை அழகைப் பத்தி இதுவரை எங்கிட்டே ஒருத்தரும் சொல்லவே இல்லியே! காட்டவும் இல்லியே! இன்னா அழகு! இன்னா அழகு! ஐயோ! இந்த அழகு என்னை என்னமோ செய்யுதே!

**வழிகாட்டி** : உறங்காவில்லியின் உறங்கிக் கிடந்த உள்ளத்தைத் தட்டி எழுப்பியது, அந்த மாயக் கண்ணனின் மனமோக செளந் ரியமோ? மாதவ யோகி இராமாநுஜரின் சீகர சக்தியோ? எதுவோ? அந்த அழியா அழகிற்கு மீளா அடிமையாகி விடுகிறார்,

உறங்காவில்லி. சுவாமிகளின் நம்பிக்கை வீண் போகவில்லை. உறங்காவில்லியைப் போன்ற சிற்றின்பக் காதலனைப் பேரின்பக் காதலனாய் மாத்த முடியும், என்று அவர் நினைத்தார். நினைத்தது நிறைவேறி விடுகிறது. உறங்கா வில்லி பிள்ளை உறங்காவில்லிதாசர் என்றும், பொன்னாச்சி ஹேமாம்பா என்றும் தாச நாமங்கள் பெற்றுத் திருமடத்தில் பாகவத கைங்கரியம் புரிந்து வருகிறார்கள்.

**அர்ச்சகர்** : அப்படியே வில்லியோட மருமக்களான வண்ட வில்லியும், செண்ட வில்லியும் எம்பெருமானார் மடாலயத்திலே வந்து சேர்ந்து; வண்டலங்கார தாசராகவும், செண்டலங்கார தாசராகவும் அரசாங்க சேவகம் தவிர, மற்ற நேரங்களிலே எல்லாம் ஆச்சாரிய கைங்கரியத்திலே ஈடுபட்டு வர்றா. அவாளுக்குக் கிடைக்கிற அரசாங்க ஊதியங் களை அப்படியே ஆச்சாரியார் திருவடிகளிலே சமர்ப்பிச்சுடுறா. யதிராஜரும் அந்தக் காணிக் கையை ஏத்துக்கிண்டு மடத்துக் கைங்கரியத் துக்குப் பயன்படுத்திக்கிறார்.

**வழிகாட்டி** : வில்லிகளின் புரட்சிகரமான மாற்றம் அகளங்க மன்னன் மனத்தையும் மாற்றி விடுகிறது. அந்த அடியவர்களிடம்

வேலை வாங்காமலே ஊதியம் வழங்கி வருகிறான். அவர்கள் அதனையும் சுவாமி களிடம் வழக்கம்போல் காணிக்கை செலுத்து கிறார்கள். ஆனால் அவர் அதை அங்கீகரித்துக் கொள்ளவில்லை. வேலை வாங்காமலே அரசன் அளித்து வந்த ஊதியத்தை அருவருப் புடன் ஒதுக்கித் தள்ளிவிடுகிறார்.

**இரா:** பிள்ளைகளே! மெய்வருந்த உழைத்து அறவழியில் சம்பாதிக்கும் பொருள் மெய்த் திரு. உழைப்பின்றித் தேடிக் குவிப்பது பொய்த்திரு. பொய்த்திரு நம் கைங்கரியத் துக்கு உதவாது. பொய்த்திருவாகிய பால பொக்கிஷம் விஷம் கலந்த பாலுக்கு நிகர்.

**அர்ச்சகர்:** ஆச்சாரியாரோட அந்த இதோப தேசத்தைக் கேட்ட மூன்று பேரும் உழைப் பில்லாமல் பெற்றுவந்த ஊதியங்களை அரசர் கிட்டே திருப்பிக் கொடுத்துடுறா. அந்தச் செய்கை மன்னன் மனத்தைத் தொட்டுடுறது. அகளங்கன் தானும் அரச போகத்தைத் துறந்து ராஜாதி ராஜ யதிராஜர் பாதத்திலே வந்து சரணடைஞ்சுடுறான். சுவாமிகள் அவனை ஆட்கொண்டு, அவனுக்கு அகளங்க நாட்டாழ்வான் என்கிற தாச நாமம் சாத்தி ஆலய கைங்கரிய மேல் பார்வையிடுற அதிகாரியா நியமிக்கிறார்.

**வழிகாட்டி** : வில்லிதாசர் தாழ்ந்த குலத்தவராக இருந்தாலும் உயர்ந்த உள்ளம் படைத்தவர், உள்ளத்தால் உயர்ந்த உத்தமர். தேசமெல்லாம் தீண்டத் தகாதவர் என்று ஒதுக்கும் ஒருவரை மகா புனிதமானவராக மதித்து, இதயத்தில் இடமளித்து அன்புடன் அரவணைத்துக் கொள்ளும் எம்பெருமானாரின் சமரசச் சமத்துவப் பண்பாட்டுக்கு வில்லிதாசரே நிகரற்ற சான்று.

**அர்ச்சகர்** : வழக்கம் போல சுவாமிகள் காவிரித் துறையிலே நீராடி விட்டுத் தன் அந்தரங்க சீடர்களான முதலியாண்டான், கூரத்தாழ்வான் இருவர் கைகளிலும் ஈரத் துணியிட்டுப் பிடித்துக் கொண்டு திரும்பி வருகிறார். அப்போ எதிரே வந்த உறங்காவில்லி எதிராஜரை அடிதொழுது நிற்கிறார். உடனே சுவாமிகள் அந்த அன்பர் தோள்மேலே கையைப் போட்டு அணைத்துக் கொண்டு நடந்து வருகிறார். நீராடின பிறகு பவித்திரரான கூரேசனையும் திரிதண்டரான முதலியாண்டனையும் துணியிட்டுத் தீண்டும் எம்பெருமானார் தீண்டத் தகாதவரை வெறுங்கையாலே கட்டித் தழுவிக் கொள்கிறாரேன்னு சீரங்கத்தாருக்கு ஒரே திகைப்பு. வில்லிதாசர், பொன்னாச்சி - இந்த

இருவர் மீதும் சுவாமிகள் அசாதாரண அன்பும் அபிமானமும் செலுத்தி வருவது மடத்திலுள்ள சிலருக்குப் பொறாமையைத் தூண்டிவிடுறது. அவர்களுக்கு வில்லிதாசர் தம்பதிகளோட பெருமையை வெளிப்படுத்தத் திருவுள்ளம் கொள்றார்.

**வழிகாட்டி :** ஒருநாள் திருமடத்தில் உலர்த்தப் போட்டிருந்த பாகவதர்கள் சிலரின் ஆடைகளில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு முழம் கிழிக்கப்பட்டிருக்கிறது. அது கண்ட பாகவதர்க வாயில் வந்தபடி வைது கொண்டிருக்கிறார்கள். சுவாமிகள் சமாதானப் படுத்துகிறார்.

**இரா :** ஆடையைக் கிழித்த கள்வன் கருணை வள்ளலாகத்தான் இருக்க வேண்டும். ஏதோ ஒரு நோக்கத்தோடுதான் ஒவ்வொரு முழத்தை மட்டிலும் கிழித்துப் போயிருக்கிறான்.

**குரல் I :** எதுவாயிருந்தாலும் திருட்டு திருட்டுத்தானே சுவாமி?

**இரா :** ஆயினும் ஆடையில் ஒரு முழம் போனதால் அப்படி ஒன்றும் நஷ்டமில்லையே?

**குரல் 2 :** அதெப்படி நஷ்டமில்லை, என்று சொல்ல முடியும் ?

**இரா :** ஸ்ரீவைஷ்ணவர்களைத் தவிர வேறு யார் இந்தக் காரியம் செய்திருக்க முடியும் ?

**குரல் 1 :** (முணுமுணுத்து) வைஷ்ணவர்களா யிருந்தாலும் இந்த அக்கிரமத்தை யாரால் பொறுத்துக் கொள்ள முடியும் ?

**இரா :** அப்படியா ? சரி, பார்க்கலாம். நீங்கள் உங்கள் வேலையைக் கவனியுங்கள்.

**உறங் :** (வந்துகொண்டே) பெரிய அபசாரம் ஸ்வாமி, அபசாரம்! இனி நான் இவளோடு வாழ மாட்டேன்.

**இரா :** அப்படி என்ன அபசாரம் உமக்கு நேர்ந்துவிட்டது?

**உறங் :** எனக்கு நேர்ந்தால்தான் பாதகமில்லையே! பாகவத அபசாரம் செய்து விட்டாள், ஸ்வாமி!

**இரா :** என்ன, பொன்னாச்சி பாகவதஅபசாரம் செய்வதா? என்னால் நம்ப முடியவில்லையே!

**உறங் :** இரவினில் இவள் படுத்துறங்கிக் கொண்டிருந்தபோது இரண்டு பாகவதர்கள்

வந்து இவள் வலது காது வைரத் தோட்டைக் கழற்றினார்களாம். இடது காதுத் தோட்டினையும் அவர்கள் கழற்றுதவற்குள் இவள் புரண்டு படுத்து அவர்களை ஓடச் செய்து விட்டாள், சுவாமி!

**இரா** : அப்படியா அம்மா பொன்னாச்சி ?

**உறங்** : அவளிடம் கேட்காதீர்கள். கேட்டால் என்னிடம் சொல்லியதைத்தான் திருப்பிச் சொல்லி கொண்டிருப்பாள். அந்தப் பாகவதர்கள் வந்து தோட்டைக் கழற்றியபோது இவள் தூங்கவில்லையாம். தூங்குவதாகப் பாசாங்கு செய்து கொண்டிருந்தாளாம். ஒரு காது அணியைக் கழற்றிக் கொண்டதும் மறுகாது அணியையும் கழற்றிக் கொள்வதற்கு வசதியாய்த் திரும்பிப் படுத்தாளாம். உடனே இவள் விழித்துக் கொண்டதாகப் பயந்து அவர்கள் ஓடிவிட்டார்களாம்!

**இரா** : ஓஹோ ?

**உறங்** : அதற்கு ஏன் இவள் இடம் கொடுக்க வேண்டும், என்கிறேன். அப்படியே படுத்திருந்தால் அவர்கள் சௌகரியம் போலேத் தோட்டைக் கழற்றிக் கொண்டு போயிருப்பார்கள் அல்லவா ? பாகவத கைங்கரியத்தையே

பாழ்படுத்திவிட்டாளே, இந்தப் பொன்னாசை பிடித்த பொன்னாச்சி !

**இரா :** சரி. இப்பொழுது நாம் சொல்லப் போவதை மடத்திலுள்ள அனைவரும் கவனமாகக் கேட்டுக்கொள்ளுங்கள். சற்றுமுன் இங்கே நடந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் நாம் தான் காரணம். உண்மையான பாகவதர்கள் யாரென்று நிரூபிக்கத்தான் நாம் இப்படி ஒரு நாடகத்தை ஆடிக் காட்டினோம். துறவிகள் ஆடைகளைக் கிழித்தது - பொன்னாச்சி நகையைக் கழற்றியது – எல்லாம் நம் ஏற்பாட்டின்படி நடந்தவைதாம்.

**உறங் :** (வியந்து) ஸ்வாமி !

**இரா :** துறவிகள் என்று சொல்லிக் கொண்டு முழுத்துணி கூட உங்களால் துறக்க முடிய வில்லை. ஆனால் வில்லியும் பொன்னாச்சியும் இழந்த வைரத் தோட்டுடன் மற்றொரு தோட்டையும் இழக்காமல் போனதற்காக ஏங்குகிறார்கள். இப்பொழுது சொல்லுங்கள் —யார் உண்மையான துறவிகள் ? யார் உத்தமமான பாகவதர்கள் ?

**உறங் :** ஸ்வாமி ! அடியேனை மன்னித்தருள வேண்டும்.

**குரல் 1**
**குரல் 2** } அடியேங்களை மன்னிந்தருள வேண்டு கிறோம்!

**இரா** : வில்லிதாசர் மீது இத்துணை அபிமானம் பாராட்டுகிறாரே, என்று உங்களில் சிலருக்குப் பொறாமையாக இருக்கலாம். என் செய்வது? அந்த அளவுக்கு அவர் நம் உள்ளத்தைத் தொட்டுவிட்டாரே! அவர் 'தான்' என்ற அகப் பற்றினையும் 'தனது' என்ற புறப் பற்றினையும் அறவே ஒழித்தவர். என் இதயத்திலே என்னை யறியாமல் எங்காவது ஒரு மூலையில் சாதிச் செருக்கெனும் அழுக்கு ஒட்டிக் கொண்டிருக்கலாம். அதனால்தான் நாம் நீராடித் திருமண் காப்பணிந்து, அனுஷ்டானம் முடித்துத் திரும்புகையில், உடலாலும் உள்ளத்தாலும் தூயவரான உறங்காவில்லி தோள் மீது கை போட்டு அரவணைத்துக் கொள்கிறோம். அப்பொழுது எம் அழுக்கு நீங்கி நாமும் பரிசுத்தமடைந்து விடுகிறோம். புறந்தூய்மை காவிரி நன்னீ ராலும், அகந்தூய்மை இந்தக் குகப் பெருமாளாலும் ஏற்படுகின்றன.

**அர்ச்சகர்** : அண்ணலின் வார்த்தையைக் கேட்டதும் அனைவரும் ஆரவாரித்து மகிழ்ச்சி யடைகிறார்கள்.

**வழிகாட்டி :** காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றனையும் நாம் பொதுவாக முக் குறும்புகள் என்று குறிப்பிடுகிறோம். ஆனால் உண்மையில் மிகக் கொடிய முக்குறும்புகள் சாதிச் செருக்கு, செல்வச் செருக்கு, கல்விச் செருக்கு ஆகியவையே! இந்த முப்பெரும் குறும்பை அறுத்து ஒரு லட்சிய பாகவத சமுதாயத்தைப் படைக்கச் சுவாமிகள் தம்மை முழுவதுமாக அர்ப்பணம் செய்து கொள் கிறார். கூரேசன், முதலியாண்டான் முதலிய சீடர் சிகாமணிகளின் ஒத்துழைப்புடன் அந்த மகத்தான சமுதாயம், திருவரங்க மடா லயத்தைக் கேந்திரமாகக் கொண்டு திக் கெட்டும் கோடிகட்டிப் பறக்கிறது.

**பாடகர் :** மொழியைக் கடக்கும் பெரும்
புகழான் வஞ்ச முக்குறும்பாம்
குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான்
சரண் கூடியபின்
பழியைக் கடத்தும் இராமநுசன் புகழ் பாடி,
அல்லா
வழியைக் கடத்தல் எனக்கு இனியாதும்
வருத்தமன்றே!

**அர்ச்சகர் :** அன்பு மயமான எம்பெருமானார் தரிசனத்துக்கு அமோக வரவேற்பு கிடைக்கிறது. இராமாநுஜர் நாடெங்கும்

சீடர் குழாத்துடன் பாத யாத்திரை சென்று தன் பக்தி நெறியைப் பரப்பி வருகிறார். செல்லும் இடங்களிலெல்லாம் ஜெயக் கொடி நாட்டுகிறார். எதிர்த்தவர்களை வாதில் வென்று விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிலை நிறுத்துகிறார். திவ்ய தேசங்களிலே ஆலயங்கள் எழுப்பித் திருப்பணி செய்து, மடாலயங்கள் நிறுவி, ஜீயர்களை நியமித்து, ஆராதனை கைங்கரியங்களை முறைப்படுத்தி வருகிறார்.

**வழிகாட்டி** : தென்னாட்டுத் திருக்கோயில்கள் இந்து சமயத்துக்குப் புத்துயிர் அளித்து வருபவை. திருக்கோயிலை மையமாகக் கொண்டே தென்னிந்திய நாகரிகமும் பண்பாடும் வளர்ந்து வந்திருக்கின்றன. அவை பக்தி நெறியின் வளர்ப்புப் பண்ணைகளாக வும், பல்கலைக் கழகங்களாகவும் பணிபுரிந்து வருகின்றன. அவ்வாறு அவை வழிவழியாகச் செயல்பட்டு வருவதற்கு ஆற்றிய தொண்டு களில் இராமாநுஜருக்குப் பெரும் பங்கு உண்டு. திருவேங்கடம், திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, திருக்குறுங்குடி முதலான திவ்ய தேசங்கள் ஐயனின் அரும் பெரும் தொண்டுகளையும், அளப்பரிய

ஆற்றல்களையும் என்றென்றும் எக்காளம் முழக்கிக் கொண்டிருக்கின்றன.

**அர்ச்சகர்** : தெற்கு, மேற்கு, வடக்குத் திசைகளிலே திக் விஜயம் செய்து சுவாமிகள் வைஷ்ணவ சித்தாந்தத்தை மக்கள் பேரி யக்கமாக வளர்த்து வருகிறார். இளைஞர், முதியோர், ஆண், பெண், பண்டிதர், பாமரர் முதலிய அனைவரும் ராமாநுஜ தரிசனத்தால் வசீகரிக்கப்பட்டுச் சீடராகிறார்கள்.

**வழிகாட்டி** : காஷ்மீரம் சென்று போதாயன விருத்தி எனும் கிரந்தத்தை ஒரு முறை பார்த்து, அதன் துணை கொண்டு சுவாமிகள் பிரம்ம சூத்திரத்திற்குத் தனிப் பெரும் வியாக் கியான நூலான ஸ்ரீபாஷ்யத்தை மிகச் சிறப் பாக இயற்றிப் பெரும் புகழ் அடைகிறார். அதனால் காஷ்மீரத்துச் சாரதாபீட சரஸ்வதியினால் ‘பாஷ்யகாரர்’ என்ற பட்டம் பெற்றுக் கௌரவிக்கப் படுகிறார். இந்தச் சீரும், சிறப்பும், செல்வாக்கும் வளர வளர, ஒரு பக்கம் பகைமையும் பொறாமை யும் தலை எடுக்கின்றன.

**அர்ச்சகர்** : முதலாம் குலோத்துங்கச் சக்கரவர்த்தியே அஞ்சி அடக்குமுறையைக் கையாளும் அளவுக்கு ராமாநுஜ சித்தாந்தம்

காட்டுத் தீ போலப் பரவத் தொடங்குகிறது. அதனால்தான் வழிபடும் கடவுளுக்குமேல் ஒன்றுமில்லை, என்று பண்டிதர்களிடமெல்லாம் கையெழுத்து வாங்கி வருகிறான். இந்த நிலையில் கூரத்தாழ்வானின் சீடனும் அமைச்சருள் ஒருவனுமான நாலூரான் சோழனிடம் துர்ப்போதனை செய்து, ராமாநுஜர், கூரத்தாழ்வான் போன்றவர்களிடம் கையெழுத்து வாங்கினாலே போதும், என்று தூண்டிவிடுகிறான். உடனே குலோத்துங்கன் ராமாநுஜரை அழைத்துவர ஆணையிடுகிறான். அந்தச் செய்தி கூரத்தாழ்வானுக்கு முதலில் தெரிந்துவிடுகிறது.

**வழிகாட்டி** : அப்போது சுவாமிகள் தீர்த்தமாடி, ஈரத்தைத் துவட்டிக் கொண்டிருக்கிறார். உயிர்காப்பான் உத்தமத் தோழனல்லவா? அவரைத் தனியே அரசவைக்கு அனுப்பிவைத்தால் ஆபத்து நேரிடும், என்பதை யூகித்தறிந்து, அவருக்குப் பதில் தாமே புறப்படச் சித்தமாகிறார். தம் வெண்ணுடையைக் களைந்து வைத்துவிட்டுக் குருநாதர் அணிந்து கொள்வதற்காக வைத்திருந்த காவி ஆடையைத் தரித்துக் கொள்கிறார். திரிதண்டத்தை ஏந்திக் கொண்டு, விடுவிடு என்று வெளியே கிளம்பி

விடுகிறார். அவருடைய கம்பீரத் தோற்றதைக் கண்ட அரச சேவகர்கள் அவரே இராமாநுஜர் என்று எண்ணி அழைத்துச் செல்கிறார்கள். ஆழ்வானைத் தனியே விடலாகாது, எனக் கருதிப் பெரிய நம்பிகளும் உடன் செல்கிறார். ஈரம் துவட்டிய ஈர நெஞ்சுடைய எம்பெருமானார் தம் துவராடையைத் தேடுகிறார்.

**முதலி** : ஸ்வாமி! கூரத்தாழ்வான் தேவரீர் காவி ஆடையை உடுத்திக் கொண்டு போய்விட்டார்.

**இரா** : ரங்க ராஜா ! இது என்ன விபரீதம்? முதலியாண்டா... அப்படியானால் அவர் வெண்ணுடையை எமக்குத் தாரும்.

**முதலி** : இந்தாருங்கள். பாதுகாப்பாய்ப் பெரிய நம்பிகளும் உடன் செல்கிறார்.

**இரா** : ஆங், அரசன் நம்மை அழைத்து வர ஆள் அனுப்பினாரா ?

**முதலி** : ஆம், பிரபோ! நாம் எதிர்பார்த்தது நடந்துவிட்டது.

**இரா** : ரங்க ராஜா ! என் பொருட்டுப் பரம பாகவத பண்டிதனான கூரத்தாழ்வாரும் ஆச்சாரிய சுவாமி பெரிய நம்பியும் பிணை

போயிருக்கிறார்களே! அவர்கள் இருவருக்கும் தீங்கு நேரிடப் போகிறதோ?

**முதலி** : சிந்திப்பதற்கு அவகாசமில்லை, ஸ்வாமி! இக்கணமே தேவரீர் இவ்விடத்தைவிட்டுப் புறப்பட வேண்டும்.

**இரா**: ரங்க ராஜா !

**முதலி** : ஸ்ரீவைஷ்ண தரிசனம் உயிர்வாழத் தாங்கள் இப்பொழுதே தப்பிப் போயாக வேண்டும்.

**அர்ச்சகர்** : ராமாநுஜர் வெள்ளை சாத்தி மைசூர் சீமையாகிய மேல்நாடு நோக்கிச் சீடர்களுடன் புறப்பட்டுவிடுகிறார். தொண்டனூர்ப் பதியை அடைந்து அங்கஹீன னான விட்டலதேவ மன்னனையும் இளவரசி யையும் அருள் பாலிக்கிறார்.

**வழிகாட்டி** : அதனால் விட்டலதேவன் 'விஷ்ணு வர்த்தனன்' எனும் தாச நாமம் பெற்றுச் சுவாமிகளுக்குத் தன் குடும்பப் பரிவாரத்தோடு சீடனாகிக் கைங்கரியம் செய்து வருகிறான். அந்த மன்னவன் துணை கொண்டுதான் சுவாமிகள் திருநாராயண புரத்தில் திருக்கோயில் எழுப்பி, மூலவரைப் பிரதிஷ்டை பண்ணி மங்களா சாசனம்

செய்கிறார். உத்சவ மூர்த்தியாகிய ராமப்பிரியா விக்கிரகத்தை மீட்டுக் கொண்டுவர, அதனைக் கொள்ளையடித்துச் சென்ற டில்லி பாதுஷா அரண்மனைக்கே வெகு துணிச்சலுடன் செல்கிறார்.

**அர்ச்சகர்** : அங்கேதான் சுவாமிகள் தன் யோக சித்தி மகிமையால் அற்புதம் நிகழ்த்திக் காட்டுகிறார். ராமப்பிரியா உத்சவமூர்த்தி சுல்தான் மகள் பீபி நாச்சியார் அந்தப் புரத்திலே இருப்பதை அறிந்து 'தொடர் சங்கிலி' எனும் பாசுரத்தை உள்ளம் உருகிப் பாடி 'என் அருமைச் செல்லப் பிள்ளையே, வருக!' என்று அழைக்கிறார். உடனே ராமப் பிரியரும் தன் அர்ச்சை நிலைமாறி, ஜெகன் மோகன செளந்தர்ய, கஸ்தூரி திகல, கௌஸ்துப ஆபரணாதி சதங்கை இசைக்க, அழகு குலுங்க அடியெடுத்து வந்து, ஐயன் மடியிலே வந்து அன்புடன் அமர்ந்து கொள் கிறார்.

**வழிகாட்டி** : அன்று முதல் ராமப்பிரியருக்குச் 'செல்லப்பிள்ளை' என்றும் 'எதிராஜ குமாரர்' என்றும் பெயர் வழங்கி வருகிறது. எம்பெரு மானையே பிள்ளையாக அனுபவிக்கக் கொடுத்து வைக்கிறது, எம்பெருமானார்க்கு.

எம்பெருமானாரைத் தந்தையாக அனுபவிக்கக் கொடுத்து வைக்கிறது, எம்பெருமானுக்கு.

**அர்ச்சகர்** : இந்த அற்புதத்தை நேரில் கண்டடில்லி சுல்தான் திக்பிரமை அடைந்து ராமப்பிரியரை ராமாநுஜருடன் அனுப்பி வைக்கிறான். வழியிலே கொள்ளைக் கூட்டத்தார், விக்கிரகச் செல்வங்களை அபகரிக்கத் துணிகிறார்கள். அப்போ அந்தப் பகுதியிலே வாழ்ந்து வந்த அரிஜன வகுப்பார் உதவிக்கு ஓடிவந்து திருடர்களைத் துரத்தி அடித்துச் சுவாமிகளையும், சீடர்களையும், ராமப்பிரிய விக்ரகத்தையும் ஆபத்திலிருந்து காப்பாற்றித் திருநாராயணபுரத்திலே கொண்டு வந்து சேர்த்து விடுகிறார்கள்.

**வழிகாட்டி** : உத்சவ மூர்த்தியைக் காப்பாற்றியவர்கள் அன்று தாழ்ந்த குலத்தினர் என்று ஒதுக்கப்பட்டு வைத்திருந்த அரிஜனங்கள்—காந்தியடிகளால் 'அரிஜனங்கள்' என்று அழைக்கப் பெறுவதற்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே, வைதிகர்கள் எதிர்ப்பையும் மீறி அவர்களைத் திருக்குலத்தார் என்று அழைத்து, உயர்ந்த அந்தஸ்து அளித்து அவர்களுக்கு ஆலயப் பிரவேச

உரிமையும் வழங்குகிறார். இதனால் தாழ்ந் தவர் உயர்ந்தார்; உயர்ந்தவர் பணிந்தார். தாழ்வில் உயர்வும், உயர்வில் பணிவும் ஐயன் வாழ்ந்து காட்டிய ஆதர்சப் பண்பாடுகள்.

**அர்ச்சகர் :** அரிஜன மக்களின் ஆலயப் பிர வேசத்துக்கு அன்னிக்கே முன்னோடியாக இருந்த சுவாமிகள் சர்வ சமய சமரச நோக் குடையவராக இருந்த செய்தி நம்மைப் பெருமையும் பேரானந்தமும் அடையச் செய்யறது.

**வழிகாட்டி :** ராமப்பிரிய விக்ரகத்தின் பிரிவைத் தாளாமல் டில்லி சுல்தான் மகள் பீபி நாச்சியார், விக்ரகத்தைத் தொடர்ந்து பல்லக்கில் வந்து கொண்டிருந்தாளாம். பல் லக்கில் இருந்தபடியே ஜோதியில் கலந்து விட்டாளாம். முஸ்லிம் சமயச் சார்புடைய பீபி நாச்சியாரை 'வர நந்தினி' எனும் திருப் பெயரில் வைணவ ஆலயத்தில் பெருமாள் சிலையின் பக்கத்தில் பிரதிஷ்டை செய்து தெய்வீக அந்தஸ்தும் சமய ஒருமைப்பாடும் கண்ட பெரும் புரட்சி, பிற சமயத்தாருக்கும் பிரமிப்பாகவும் சவாலாகவும் உள்ளது.

**அர்ச்சகர் :** திருக்குறுங்குடி போல உள்ள திவ் விய தேசங்களிலே பெருமாள் கோயிலுக்

குள்ளே சிவபெருமான் சந்நிதியும் அமைத்து ஆராதனை வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்திருக்கிறதும் சுவாமிகள் சமரச நோக்கிற்குச் சாட்சி.

**வழிகாட்டி** : யாதும் ஊரே யாவரும் கேளிர், என்ற ஒருமைப்பாட்டு முழக்கம் செய்வது இராமாநுஜ தரிசனம். எந்த இனத்தாரும் ஸ்ரீவைணவர் ஆகலாம். அப்போது அவர்கள் தொண்டர் குலத்தினர் ஆகிவிடுகிறார்கள். தொண்டர் குலத்திலே ஜாதி பேதம், உயர்வு-தாழ்வு கிடையாது. ஜாதியைக் குறிப்பிட்டு ஜன்ம நிரூபணம் செய்வதும், ஊரை மதிப்புக் குறைவாய்க் குறிப்பிட்டு வாச நிரூபணம் செய்வதும் பாகவத அபசாரமாகிய மிகப் பெரிய குற்றங்கள் என்கிறது, சுவாமிகள் வளர்த்துவிட்ட ஸ்ரீவைணவ தரிசனம். ஆம்! ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற உலக ஒருமைப்பாட்டு முழக்கம் செய்வது இராமாநுஜ தரிசனம்.

**அர்ச்சகர்** : ராமாநுஜர் 12 ஆண்டுகள் திருநாராயணபுரத்திலே இருந்து ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தைப் பரப்பி வருகிறார். அவர் சகல கலா வல்லவராகவும் திகழ்ந்து வருகிறார். சமயப் பணியும் சமுதாயப் பணியும் மேற்

கொண்டு, பிரசித்தி பெற்ற மோதிலாப் ஏரியை அமைத்து, மக்கள் குடிநீர்ப் பிரச்சனை தீர்த்த கருணாசாகரம் அவர். குன்றுகளுக்கிடையே 'வி' வடிவில் கட்டிய 4 கிலோ மீட்டர் நீளமும் 1.5 கி மீ. குறுக்களவும் உள்ள மிகப் பெரிய அந்த ஏரி ஐயன் ஒரு பொறி இயல் வல்லுநர் என்பதை ஆண்டாண்டு காலமாக அலைக்கரம் கொட்டி முழக்கிக் கொண்டிருக்கிறது.

**வழிகாட்டி :** திருநாராயண புரத்தில் சுவாமிகளின் உடலும், திருவரங்கத்தில் உள்ளமுமாக இருந்து வருகிறார். அன்பிற்கினிய கூரத்தாழ்வானையும் பெரிய நம்பிகளையும் நினைந்து உருகுவார். அம்மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில் திருவரங்கத்திலிருந்து மாருதிச் சிறிய ஆண்டான் வந்து எல்லா விவரமும் தெரிவிக்கிறார்.

**அர்ச்சகர் :** கூரேசனையும் பெரிய நம்பியையும் அரண்மனைச் சேவகர்கள் அழைத்துச் சென்றார்கள் அல்லவா? குலோத்துங்கன் அதற்கு முன் கூரேசனைப் பார்த்ததில்லை. அவருடைய சிவந்த திருமேனியையும் ஆஜானுபாகுவான ஆகுருதியையும் கண்டு அவரே ராமாநுஜரென்று தீர்மானிக்கிறான். ஆனால் நாலூரான் 'இவர் ராமாநுஜர் அல்ல.

ராமாநுஜரின் சீடர் கூரத்தாழ்வான். உடன் வந்திருப்பவர் குருநாதர் பெரிய நம்பிகள், என்று இனங்காட்டிக் கொடுக்கிறான். உடனே குலோத்துங்கன் ராமானுஜரைத் தப்ப விட்டு விட்டதற்காகச் சேவகர்களைக் கடிந்து கொள்கிறான்.

**வழிகாட்டி** : ஆயினும் அவரிடம் ஏடு கொடுக்கப்படுகிறது. அதில் எல்லாரையும் போல அவரும் கையெழுத்திடல் வேண்டு மென்று கட்டளை பிறக்கிறது. கூரேசன் ஏட்டில் எழுதியிருந்ததைப் படிக்கிறார் 'சிவாத் பரதரம் நாஸ்தி' — சிவனைக் காட்டிலும் உயர்ந்த பொருளில்லை, என்பது பொருள். கூரத்தாழ்வான் தம் கொள்கையையும், மன்னவன் மதச் சார்பற்றவனாக இருக்க வேண்டியதன் அவசியத்தையும் எடுத்துரைக் கிறார். அரசன் கேட்டபாடில்லை. உடனே 'சிவாத் பரதரம் நாஸ்தி' என்ற வாக்கியத் திற்குப் பின் 'த்ரோண மஸ்தி தத: பரம்' என்று எழுதிக் கையெழுத்திடுகிறார். சிவம் என்பதற்கு மரக்கால் என்ற பொருளும் உண்டு, எனவே மரக்காலைக் காட்டிலும் பெரியது பதக்கு, என்று தொனிக்கும்படி எழுதுகிறார். அது கண்டு சீறிய சோழன், அரச சபையை அவமதித்ததற்காக இவர் கண்களைப் பிடுங்குங்கள், என்று கர்ஜனை செய்கிறான்.

**அர்ச்சகர் :** ஆனால் கூரத்தாழ்வாரே முந்திக் கொண்டு, 'உன்னைப் பார்த்த கண்களைப் பிடுங்கி எறிய வேண்டியதுதான்' என்று கூறித் தாமே தம் கை நகங்களால் விழிகளைப் பெயர்த்தெடுத்து வேந்தன் முன் வீசி எறிகிறார். கொலு மண்டபமே அதிர்ந்து விடுகிறது. அதே போல் நம்பிகளும் ஒப்பமிட ஒப்பவில்லை. அதனால் அவரைப் பிடித்துக் கொண்டுபோய் மன்னவன் உத்தரவுப்படி அவர் கண்களைப் பறித்து விடுகிறார்கள்.

**வழிகாட்டி :** பெரிய நம்பி உண்மையில் **பெரிய** நம்பிகள்தாம். அதனால்தான் அவர் தம் கண்களைப் பறித்த காவலன் மீது வெறுப்போ கோபமோ கொள்ளாமல் அவன் அறிவு திருந்த வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்கிறார். ஆழ்வானோ ''இவர்களே என் உண்மையான நண்பர்கள்'' என்று தம்மைத் துன்புறுத்தியவர்களைக் குறிப்பிட்டு மகிழ்ந்து போகிறார்.

**அர்ச்சகர் :** திருமால் எங்கும், எல்லா உயிர் களிலும் வியாபித்திருப்பவர். 'விஷ்ணு' என்ற சொல்லுக்கு 'வியாபித்திருப்பவன்' என்பது தான் உட்பொருள். இந்த விஷ்ணு சம்பந்தம் பெற்றிருப்பவர்கள் வைஷ்ணவர்கள். பெரிய

நம்பியும் கூரேசனும் உண்மையான வைஷ்ணவர்கள். ஆகையால் தீமை செய்தவர்களிடத்திலும் திருமாலைக் காண்கிறார்கள். தீமையில் நன்மையைக் காண்கிறார்கள், அந்தப் **பிரபந்ந திலகர்கள்.**

**வழிகாட்டி** : ஆழ்வான் திருவரங்கம் திரும்புகிறார். வயது முதிர்ந்த பெரிய நம்பிகள் அங்கேயே பரமபதிக்கிறார். அவ்வமயம், 'திருவரங்கத்தை விட்டு ஒரு காட்டுப் பிரதேசத்திலே அவர் உயிர்விடும் நிலை வந்து விட்டதே!' என்று கூரேசன் முதலானோர் பரிதவிக்கிறார்கள். ஆனால் ஆச்சாரியார் நம்பிகளோ 'கைங்கரியம் புரிந்தோ தியாகம், செய்தோ உயிர்விடும் இடமே புனிதஸ்தலம்' என்று பூரிப்படைகிறார்.

**அர்ச்சகர்** : ஆம்! ராமாநுஜருக்காகவும், ராமாநுஜ தரிசனத்துக்காகவும் கண்களைத் தியாகம் செய்த பெரியவரல்லவா அவர்? அவர் எங்கே மரித்தாலும் அது திவ்ய தேசந்தான்.

**வழிகாட்டி** : வைணவர்கள் வாழும் இடம் வைகுந்தம்தான். இராமாநுஜர் வாழ்ந்த திருவரங்கம் சொர்க்கம்தான் — பூலோக சொர்க்கம் தான்.

**அர்ச்சகர்** : மாருதிச் சிறியாண்டான் சொன்ன கண்ணைப் பறித்த செய்தி ஸ்வாமிகளின் நெஞ்சைப் பறித்துவிடுகிறது. 'கண் போச்சுதே! கண் போச்சுதே !' என்று கதறி விடுகிறார். ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்துக்கும் அவருக்கும் தரிசனமாக இருந்த ஆச்சாரியாரும், சீடரும் கண்களை இழந்தது, தானே இழந்தது போலத் துடிக்கிறார். அவர் துடிப்பை மேலும் அதிகரிக்கச் செய்வது போலே திருக்கோஷ்டியூர் நம்பிகள் ஆகிய அவருடைய குருமார்களும், பிள்ளை உறங்காவில்லி போன்ற பழுத்த வயதுடைய பரம பக்தர்களும் திருநாட்டிற்கு எழுந்தருளிய செய்தி திடுக்கிட வைக்கிறது. கண்களைப் பறித்த குலோத்துங்கனும் கழுத்தில் புழுத்துச் செத்தான், என்று அறிகிறார்.

**வழிகாட்டி** : உடனே எம்பெருமானார் திருவரங்கம் செல்லத் திருவுள்ளம் பற்றுகிறார். சுவாமிகளும், சீடர்களும் திருநாராயணப் பெருமாளைச் சரணாகதி செய்து திருப்பல்லாண்டு சேவிக்கிறார்கள்.

**பாடகர்** :

*அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி*
*ஆயிரம் பல்லாண்டு*

வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு

வடிவார் சோதி வலத்துறையும்
சுடராழியும் பல்லாண்டு

படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே!

**வழிகாட்டி** : பின்னர் திருநாராயண புரத்தை விட்டுப் பிரியாவிடை கொள்கிறார் ஆனால் சீடர்களால் அவரைப் பிரிய முடியவில்லை. எனவே, சுவாமிகள் தம்மைப் போலவே ஒரு பஞ்சலோக விக்ரகத்தை உருவாக்கி, அதில் தாமே உகந்து, தம் சக்தியைப் பிரதிஷ்டை செய்கிறார். ஜீவனைத் தம் தேகத்திலிருந்து பிரித்து வேறொரு விக்கிரகத்தில் புகுத்திய தாமேயிருந்து பேசும் யோக சித்தியை Transcendental Spiritual Yoga என்று குறிப்பிடுகிறார்கள். அந்த யோக சித்தி மகிமையால் தம் விக்கிரகித்தைப் பேசச் செய்யும் மற்றொரு அற்புதம் நிகழ்த்திக் காட்டுகிறார், மேல்கோட்டை எனும் திரு நாராயணபுரத்திலே. இவ்வாறு ஸ்தாபித்த விக்ரகத்துக்குத் ‘தமர் உகந்த திருமேனி’ என்று பெயர் சூட்டுகிறார். தமர் உகந்த திருமேனியைச் சீடர்களிடம் பிரசாதித்து விட்டுத் திருவரங்கம் வந்தடைகிறார்.

**அர்ச்சகர்:** இரண்டாவதாக ஸ்ரீபெரும்பூதூரிலே அப்படி ஒரு விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்கிறார். அது **தான் உகந்த திருமேனி**. மூன்றாவதாகத் திருவரங்கத்தில் சுவாமிகளின் திருமேனியை ஸ்தாபித்துத் **தானான திருமேனி** என்று நாமகரணம் செய்கிறார். இதோ இந்த உடையவர் சந்நிதிதான் தானான திருமேனி.

**வழிகாட்டி:** எம்பெருமானார் தம் மூர்த்தங்களில் மட்டுமல்லாது ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்திலும் தம் சக்தியைப் பிரதிஷ்டை செய்து விட்டுச் சென்றுள்ளார். அதிலே சுவாமிகள் நம்மோடு பேசுகிறார். நமக்குச் சதா காலமும் உபதேசம் செய்துகொண்டிருக்கிறார்.

**அர்ச்சகர்:** ராமாநுஜர் ஸ்ரீரங்கம் வந்ததும் பெருமாளைச் சேவித்த கையோடு நேரே கூரத்தாழ்வானைக் காண விரைகிறார்.

**இரா:** ஆழ்வான்! உமக்கு இந்தக் கதி நேர்ந்து விட்டதே நீர் என்ன ஐயா பிழை செய்தீர்?

**கூரே:** என்னை அறியாமல் ஏதேனும் பிழை செய்திருக்கக் கூடும், பிரபோ!

**இரா:** கனவில் கூடக் குற்றம் செய்தறியாத கருணைக் கடலா பிழை செய்திருக்க முடியும்?

அல்ல. அடியேன் செய்த தீவினையால்தான் உமக்கு இந்தத் தீங்கு நேர்ந்திருக்கிறது. கூரேசா! பெருமாளை வரங் கேட்டு மீண்டும் உமது விழிகளைப் பெற்றுக் கொள்ளும், ஐயா!

**கூரே :** ஸ்வாமி, தேவரீர் தமியேனுக்கு அளித்திருக்கும் ஞானக் கண்களே போதும். அதன் துணை கொண்டு தங்கள் திருவடியின் கீழ் அமர்ந்து, காலமெல்லாம் கைங்கரியம் செய்யக் காத்திருக்கும் ஏழையேனுக்கு ஊனக் கண் இருந்தால் என்ன? இழந்தால் என்ன?

**இரா :** நீர் என்னதான் சொன்னாலும் என் மனம் சமாதானம் அடைய மாட்டேனென்கிறதே! நீர் எப்படியாவது இழந்த கண்களைப் பெறத்தான் வேண்டும். எனவே வரதராஜப் பெருமாளை வேண்டி ஒரு தோத்திரம் விண்ணப்பம் செய்து கொள்ளும்.

**கூரே :** நேத்திரம் அருளத் தோத்திரம் செய்வதா? சரி. ஆசான் நியமித்தபடி வரதராஜஸ்துவம் பாடுகிறேன்.

(இசை - வரதராஜஸ்துவப் பாடல்)

**அசரீரி :** ஆழ்வானே! உமது பிரார்த்தனையை ஏற்றுக் கொண்டோம். உமக்கு என்ன வரம் வேண்டும்?

**கூரே** : (உணர்ச்சி பொங்க) எம்பெருமானே! ஏழையேன் வேண்டுகோளுக்கு இரங்கி விட்டீரா? எனக்கு வேண்டிய வரம் இதுதான்- நான் பெற்ற பேறு நல்லூரரானும் பெற வேண்டும்.

**அசரீரி** : (மணி முழக்கத்துடன்) அங்ஙனமே ஆகக் கடவன்.

**இரா** : (வியப்பும் திகைப்பும் உவப்பும் மேலிட) கூரேசா! கூரேசா! நீர் மனிதரல்ல. ஈசனே தான். நீர் விழிகளை வென்றுவிட்டீர். இந்தக் குருட்டு உலகில் நீர்தாம் தரிசனம் பெற்றவர். உம்மால் ஸ்ரீவைஷ்ணவ தரிசனம் கண்ணொளி பெற்றுவிட்டது.

**வழிகாட்டி** : கண்ணுக்கு கணிகலம் கண்ணோட்டம். அதாவது கருணை என்பதை நிதரிசனமாகக் காட்டிவிட்டார், கூரேசன். தாம் கண் இழப்பதற்குக் காரணமாய் இருந்த மகாபாவி நாலூரானுக்காக வரம் வேண்டி அவனைக் கடைத்தேறச் செய்துவிட்டார். பகைவனையும் அருள் பாலித்துவிட்டார்!

**அர்ச்சகர்** : திருமாலை உயிராகக் கொண்ட உலகத்திலே எந்த உயிரைப் பகையாகக் கருதுவது? எவ்வுயிரை அன்னியமாகக் கருதுவது? எல்லா உயிர்களிடமும் அன்பு

கொண்டு ஒழுகுவதுதான் எம்பெருமானுக்குச் செய்யும் தொண்டு. இதுவே சீடர்கள் மூலம் காட்டும் எம்பெருமானார் தரிசனம்.

**வழிகாட்டி :** கண்ணுக்குக் கண்ணான கூரேசன் திருநாட்டுக்கு எழுந்தருளும் விருப்பத்தை விண்ணப்பித்துக் கொள்கிறார்.

**இரா :** ஆருயிர்ச் சீடரே. எம்மைப் பட்டமரம் போல் தனியே விடுத்துச் செல்ல நாம் உமக்கு என்ன குறை வைத்துவிட்டோம் ?

**கூரே :** தங்களிடம் குறை கண்டுபிடிக்க முடியுமா ஸ்வாமி? ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தையும், பாகவத தருமத்தையும் உலகில் நிலை நிறுத்தி விட்டுத் தேவரீர் திருநாட்டிற்கு எழுந்தருளும்போது, தங்களை எதிர்கொண்டு வரவேற்று உபசரிக்கும் பேறு எனக்குக் கிடைக்க வேண்டாவா? இங்குபோல் அங்கும் அடியேன் தங்கள் திருவடிக் கைங்கரியம் புரிய வேண்டாவா? அதற்காகத்தான் நான் முன் கூட்டியே திருநாடு அடைய விழைகிறேன்.

**வழிகாட்டி :** இத்தகைய அதி அற்புத ஆச்சாரிய பக்தி குருவின் உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொண்டுவிடுகிறது. குருநாதரால் சீடர் உயர்வது உண்டு. ஆனால் கூரேசனைப்

பொருத்தவரை குருநாதரே சீடரால் உயர்ந்து விட்டார், என்று நிச்சயமாய்க் கூறலாம். இராமாநுஜர் ஒவ்வொரு சீடரையும் தம்மைப் போலவே உருவாக்க முனைந்தார். அவர் முயற்சியும் வீண் போகவில்லை. அதில் அவர் மாபெரும் வெற்றி கண்டுவிட்டார்.

**அர்ச்சகர் :** ஒவ்வொரு சீடரை மட்டுமல்ல, ஒவ்வொரு ஜீவனையும் தன்னைப் போல உயர்த்தவே ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்த சாரம், சரணாகதி சத்யம், வேதார்த்த சங்கிரகம், கீதா பாஷ்யம் முதலான 9 அருளிச் செயல்களையும், 6 கட்டளைகளையும், 82 வார்த்தைகளையும் எம்பெருமானார் தரிசனத்தையும், ஆச்சாரிய பரம்பரையும், ஜீயர்களையும், சீடர்களையும், தொண்டர் குலத்தையும் வரப்பிரசாதமாக உபகரித்துச் சென்றிருக்கிறார்.

**வழிகாட்டி :** எம்பெருமானார் சீடர் குழாத்துள் பஞ்ச ரத்தினங்களும் உண்டு. நவமணிகளும் உள்ளனர். பெண்மணிகளும் மிகுதி. ஸ்ரீவைணவத்திற்கு ஸ்ரீ பாஷ்யம் ஒரு கோட்டை என்றால், இவர்களை யெல்லாம் காவலர்கள் என்று குறிப்பிடலாம்.

**அர்ச்சகர்** : இராமாநுஜர் தன் ஆதர்ச குரு நாதரின் மூவகை விருப்பங்களையும் நிறைவு செய்து ஸ்ரீபாஷ்யம் இயற்றி அருளினார். ஞான மார்க்கத்துடன் பக்தி மார்க்கமும் சேர்ப்பதுதான் பிரமத்தை எளிதில் அறியும் நெறி, என்ற தனது தனிப்பெரும் விசிஷ்டாத் வைதக் கொள்கையை அதன் மூலம் நிலை நிறுத்தினார். கூரத்தாழ்வான் மைந்தர் களுக்கு வியாச பராசர முனிவர்களின் ஞாப கார்த்தமாக பராசரபட்டர், வியாச பட்டர் என்ற திருநாமங்கள் சாத்தினார். அந்திம காலத்திலே திருவாய் மொழிக்கும் விளக்கம் அருளினார். இந்த மூன்று பணிகளாலும் ஆச்சாரியார் ஆளவந்தார் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்கிறார். எல்லாப் பணிகளையும் நிறைவேற்றி, 120 ஆண்டுகள் வாழ்ந்து, தாம் அவதரித்த அதே பிங்கள ஆண்டு சித்திரைத் திங்கள், திருவாதிரைத் தியன்று திரு நாட்டைச் சுவாமிகள் அலங்கரிக்கிறார்.

**வழிகாட்டி** : உம்மால் உலகம் உயர்ந்துவிடும், என்று திருக்கோஷ்டியூர் நம்பிகள் திருவாய் மலர்ந்து அருளியதற்கு இணங்கச் சுவாமிகள் மக்கள் தொண்டே மாதவன் தொண்டாகக் கருதிக் கைங்கரியம் செய்து உயர்ந்தவர், ஆலயங்களை அழகுபடுத்தி, ஆராதனைகளை ஒழுங்குபடுத்தி, ஆரணங்களோடு ஆழ்வார்

பாசுரங்களையும் பாராயணம் செய்து வர, அன்று அவர் நியமித்தபடியே இன்றும் நாளையும் என்றென்றும் நடைபெற்று வருகிறது.

**அர்ச்சகர்** : எங்கும் நிறைந்த எல்லாம் வல்ல திருமாலே பரத்துவம். ஜீவ கோடிகளாகிய நாம் அனைவரும் அவனுடைய பக்த கோடிகளே. நம்மிடம் அவன் எதிர்பார்ப்பது கைங்கரியமே. அதுவே நமக்குப் புருஷார்த்தம். சாதி வெறியும், குலப் பெருமை பேசுதலும் ஒழிக்கப்படல் வேண்டும். பிறப்பால் வேற்றுமை இல்லை. எனவே எல்லாரும் தொண்டர் குலமே. ஸ்ரீவைஷ்ணவத்தின் உயிர்நாடியான ஒன்றுகூடி வாழும் கொள்கைக்கு அனைவரும் தலை வணங்க வேண்டும். இவையே எம்பெருமானாரின் தலை சிறந்த சித்தாந்தம்.

**வழிகாட்டி** : ஸ்ரீவைணவத்தில் பெரியவர்—சிறியவர் என்ற பேதங்கள் இல்லை. அத்துணை சௌலப்பியம் உடையவர்கள் வைணவப் பெருமக்கள். இந்த உயரிய பண்பாட்டை ஆச்சாரியர்களிடமும் காணலாம். பாகவதர்களிடமும் காணலாம்.

**அர்ச்சகர்** : மலர்கள் இறைவனால் படைக்கப் பெற்றவை. ஆனால், அவற்றைப் பக்தனிடமிருந்து பெறுவதில்தான் பகவான் திருக்கோயில்களில் நந்தவனக் கைங்கர்யங்களை நிர்வகித்து வருகிறார்.

**வழிகாட்டி** : திருப்பதியில் திருநந்தவனம் அமைத்த வைபவம் இராமாநுஜரின் வாழ்க்கையில் மிகச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க ஒன்று. எம்பெருமானார் அதனைத் தரிசிக்கத் திருப்பதிக்கு எழுந்தருள்கிறார். அவர் வருகை அறிந்த முதுபெரும் ஆச்சாரிய குரு பெரிய திருமலை நம்பிகள் தம் சீடரை எதிர் எதிர்கொண்டழைக்கத் திருமலையிலிருந்து கீழிறங்கி வருகிறார். அது கண்டு திடுக்கிட்ட சுவாமிகள் 'தேவரீர்! இவ்வளவு சிரமப்பட்டு இறங்கி வர வேண்டுமா? வேறு யாராவது சிறியவர் ஒருவரை அனுப்பி வைக்கலாகாதா?' என்று விண்ணப்பித்துக் கொள்கிறார். உடனே பெரிய திருமலை நம்பிகள் 'அடியேனைவிடச் சிறியவனைத் தேடிப் பார்த்தேன். கிடைக்கவில்லை. அதனால்தான் நான் வந்தேன்' என்று அடக்கமாகக் கூறிக் கொள்கிறார்.

**அர்ச்சகர்** : மிகச் சிறந்த அந்த சௌலப்பியப் பரம்பரையில் வளர்ந்து ஆளானவர் அல்லவா,

சுவாமிகள்! அதனால்தான் அவருக்கு இத்துணைச் சிறப்பு.

**வழிகாட்டி** : இவரது திருமுடியால் இவருக்கு முந்தைய ஆழ்வார்களும் ஆசாரியார்களும் பெருமையடைகிறார்கள். இவரது திருவடியால் இவருக்குப் பிந்திய ஆச்சாரியர் களும், சீடர்களும் உயர்வடைகிறார்கள்.

**அர்ச்சகர்** : அந்த வகையிலேதான் பெரிய நம்பிகளே இவரை ஆளவந்தாரை நேரில் கண்டது போல் அடிபணிந்து தண்டனிட்டார். திருக்குறுங்குடிப் பெருமாள் அழகிய நம்பி இவருக்குச் சீடராகி உபதேசம் பெற்று 'வைணவ' நம்பி என்ற திருநாமம் பெறுகிறார். அத்தகைய ஆச்சாரிய பீடத்துக்குரியவர் இராமாநுஜப் பெருமுனிவர்.

**வழிகாட்டி** : நம்மாழ்வாரை ஸ்ரீ வைணவத் தின் தாய் என்றும், ஆழ்வார்களில் தலை சிறந் தவர் என்றும் வைணவ உலகம் போற்றிவரு கிறது. ஆனால், அம்மாதிரிச் சிறப்பு வாய்ந்த நம்மாழ்வார் பெயரால் ஸ்ரீவைணவ தரிசனம் வழங்கப் பெறவில்லை. இராமாநுஜர் பெயராலேயே வழங்கப் பெற்று வருகிறது. ஆம்! ஸ்ரீ வைணவ தரிசனம் என்பது

எம்பெருமானார் தரிசனம்தான்; இராமாநுஜ தரிசனம்தான்.

**அர்ச்சகர்** : சமுதாயத்தை விட்டு விலகிச் சென்று தனி மனிதன் அடையும் மோட்சத்தை நான் வெறுக்கிறேன். இது இராமாநுஜ சித்தாந்தம். சமுதாயத்தை உயர்த்த அவர் கண்ட சித்தாந்தம் மக்கள் சித்தாந்தமே.

**வழிகாட்டி** : வடுக நம்பி என்ற சீடர் எம்பெருமானாரின் பாதுகையையே தெய்வமாக வணங்கி வந்தார். அத்தகைய தெய்வீகத் திருவடி அவருடையது.

**அர்ச்சகர்** : நம்மாழ்வார் தம்மை எம்பெருமான் திருவடி என்று சாதிக்கிறார். எம்பெருமானாரோ தம்மை நம்மாழ்வார் திருவடி என்று சாதிக்கிறார். வைணவத் திருக்கோயில்களில் சடகோபம் சாதிக்கும் தத்துவம் இதுதான்.

**வழிகாட்டி** : எதிராஜ உடையார், சடகோபரின் பேரின்பத் திருவடியைத் திருமுடியாக உடையவர்; உபய வேதாந்தங்களை உடையவர் ; தியாகம், தாய்மை, சௌலப்பியம், கருணை, பக்தி, அருள், கைங்சரியம் முதலான வைபவங்களை

உடையவர், ஆளவந்தாரை ஞானாச்சாரிய ராக உடையவர்; கூரத்தாழ்வான், முதலி யாண்டான் போன்ற உத்தமோத்தம சீடர் களை உடையவர்; எம்பெருமானுக்கும் உடையவர்; எமக்கும் உடையவர்; எல்லார்க்கும் உடையவர்.

**அர்ச்சகர் :** மனிதர்கள் மறைந்தால் காலத் தோடு கரைந்து, இறந்த காலத்தில் ஒரு பகுதியாகிறார்கள். ஆனால், மகான்கள் மறைந்தால், இறந்த காலத்திலிருந்து நிகழ் காலத்துக்கு நகர்ந்து வந்து, எதிர்காலத்தின் ஒரு பகுதியாகி நமக்கு ஒளியும் வழியும் காட்டி வர்கிறார்கள். அந்த வகையிலே பல அரிய சாதனைகளை நிகழ்த்திய இராமாநுசர் நமக்கு ஒளியும் வழியும் காட்டி வருகிறார்.

**பாடகர் :**

ஸ்ரீரங்க மங்கள நிதம் கருணாநிவாஸம்
ஸ்ரீவேங்கடாத்ரி சிகராலய காளமேகம்
ஸ்ரீ ஹஸ்தி சைய சிக ரோஜ்வல பாரிஜாதம்
ஸ்ரீ ஸம் நமாபி சிரஸாயதி சைலதீபம்
பாஸண்ட் ஸாகரமஹாபட பாமுகாக்னி
ஸ்ரீரங்கராஜ சரணாம் புஜ மூலதாஸ
ஸ்ரீ விஷ்ணு லோக மணி மண்டப மார்கதாயி
ராகாநுஜோ விஜயமே யதிராஜ ராஜ....

—❋—

# பின்னுரை

இனிய காலைப் பொழுது, நித்தம் நித்தம் புலர்கிறது. எல்லோருக்கும் எல்லாப் பொழுதும் இனிய பொழுதாய் அமைந்து விடுவதில்லை. எப்போதாவது, அபூர்வமான சந்தர்ப்பம் போல் ஒரு பொழுது, இனிமைக்கு இனிமை சேர்ந்தாற் போல், புலர்ந்து விடத்தான் செய்கிறது! அந்த இனிய பொழுது நெஞ்சில் நீங்காத இடத்தையும் பெற்று விடுகிறது.

சென்னை வானொலி நிலையத்திற்காக—ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ எதிராஜ ஜீயர் அவர்களைப் பேட்டி கண்டு, ஒலிப்பதிவு செய்வதற்காகக் குழுவையும் கொண்டு சென்றிருந்தேன். ஸ்ரீ ஜீயர் அவர்களைத் தரிசித்து உரையாடியபோது, ஸ்ரீராமானுஜர் பற்றிய பல வரலாற்றுத் தகவல்களை எடுத்துச் சொன்னார்கள். பின்னர் அங்குள்ள நந்தவனத்தில் பணியாற்றிக் கொண்டிருந்த இலக்குமி என்ற அம்மையாரைப் பேட்டி கண்டபோது, அந்த அம்மையார் ஸ்ரீராமானுஜர் மீது கொண்டுள்ள அளவு கடந்த அன்பை, பற்றை, பக்தியை எடுத்துச் சொல்லியபோது நான் மெய் சிலிர்த்தே போனேன். ''ஸ்ரீராமானுஜரின் மேல் கொண்டுள்ள பக்தியால் தான் இந்தப் பணிகளைப் பகவானுக்குச் செய்யும் தொண்டாக எண்ணிச் செய்து வருகிறேன் ஸ்ரீராமானுஜர் இந்த ஊரில் இந்த மண்ணில்தான் அவதரித்தார். இதே ஆதி கேசவப் பெருமாள் கோயிலில்தான் முதன் முதலில் திருத்தொண்டைத் தொடங்கினார். அவரது திருப்பாதங்கள் இந்தப் பூங்காவிலும், கோயிலிலும் தோய்ந்திருக்குமல்லவா? இந்த நந்தவனத்திற்கு இதே கிணற்றிலிருந்து தான் அவரின் அம்மா தண்ணீர் இறைத்து ஊற்றியிருப்பார். அல்லவா? அவர் காலடிகள் பதிந்த இந்தப் புண்ணிய மண்ணில், அவர் அன்று செய்த அதே பணிகளைச் செய்வது எத்தனை புண்ணியமானது! ஸ்ரீராமானுஜரின் பக்தையாகவே இந்தப் பணிகளைச் செய்து வருகிறேன் '' என்றார்.

அந்த அம்மையாரின் பேச்சு என் நெஞ்சை உருகச் செய்து விட்டது அவரது திருத்தொண்டு, ஸ்ரீராமானுஜரையே கண்முன் கொண்டு நிறுத்துவது போல் இருந்தது. அன்றைய பொழுது எனக்கு ஓர் இனிய நற்பொழுதாகவே ஒளிர்ந்தது!

என் பணிகள் முடிந்து திரும்பி வரும் போதும் சரி, அதன் பின்னரும் சரி, ஸ்ரீராமாநுஜர் பற்றிய எண்ணங்கள் இதயத்துள் வட்டமிட்டுக் கொண்டே இருந்தன. 'ஸ்ரீராமாநுஜர் பற்றியும், அவர் ஸ்ரீவைணவத்துக்கு ஆற்றியுள்ள பணிகள் பற்றியும் தெரிந்து கொள்ள வேண்டும்' என்ற பேரவா நெஞ்சில் துளிர்த்துக் கொண்டே இருந்தது.

ஒரு நிகழ்ச்சிக்காக நிலையம் வந்த நண்பர் புலவர் ஏ.பரந்தாமன், எம்.ஏ. அவர்களின் கையில் இனிய ஒரு நூல் இருக்கக் கண்டேன். அது, வைணவப் பெரியார் ஸ்ரீ பி ஸ்ரீ. ஆச்சாரியா எழுதிய ஸ்ரீராமாநுஜர் என்னும் நூல். அந்த நூலைக் கேட்டுப் பெற்றேன் நேரம் கிடைத்த போதெல்லாம் தொடர்ந்து படித்தேன். படிக்கப் படிக்க, ஸ்ரீ ராமாநுஜரின் ஸ்ரீவைணவத் தொண்டையும், அதற்காக அவர்தம் உயிரையும் திரணமாகக் கொண்டு போராடி வெற்றி பெற்ற அவரது மனத்திண்மையையும், தீர்க்க தரிசனத்தையும் கண்டு வியப்புற்றேன்,

'வியப்புற்றேன்' என்றது ஒரு சம்பிரதாய வார்த்தை தான். ஆனால், சில சமயம் அதிர்ச்சியுற்றேன்; மெய்சிலிர்த்தேன்; மனம் கசிந்தேன்; கண்ணீர் விட்டேன்; புத்துயிர் பெற்றேன்; உள்ளொளி பெருகினேன், என்பதுதான் உண்மை.

பழுத்த வைணவக் குடும்பத்திலே பிறந்த இளையாழ்வான் என்ற இராமானுஜர், புலமை மிக்க காஞ்சி யாதவப் பிரகாசரிடம் வேதாந்தக் கல்வி பயலுகிறார். குருவுக்கு எதிரான மாறுபட்ட கொள்கையை வலியுறுத்திப் பேசுகிறார். படித்த மேதையான குரு என்ன செய்கிறார்? இராமானுஜரைச் சூழ்ச்சியாகக் காசி யாத்திரைக்கு அழைத்துச் சென்று கொலை செய்யத் திட்டமிடுகிறார்! இதைப் படிக்கும் போது அதிர்ச்சியுற்றேன்.

திருவரங்கத்து ஆஸ்தானாதிபதி ஸ்ரீ ஆளவந்தாரைக் குருவாக ஏற்றுக் கொண்டு பணி செய்ய ஏங்குகிறார், இராமநுஜர். ஆளவந்தாரிடமிருந்து அழைப்பு வருகிறது. 'என்ன தவம் செய்தோம்!' என்ற பூரிப்பில் திருவரங்கம் செல்கிறார். இராமாநுஜர் திருவரங்கம் சென்றடைந்த போது, ஆளவந்தார் திருநாடு சென்றுவிட்டார்! ஆம், இயற்கை எய்தி விட்டார்!—இதைப் படித்தபோது நெஞ்சம் கசிந்து விட்டேன்.

ஸ்ரீ வைஷ்ணவ விசிஷ்டாத் வைதக் கொள்கைகள் பரவி வருவது சோழ மன்னனுக்குப் பிடிக்கவில்லை. ஸ்ரீ ராமா நுஜரை ஒழிக்க முடிவு செய்து தேடுகிறான். ஸ்ரீராமாநுஜர் தப்பி மைசூர் செல்கிறார். நூறு வயதை அடைந்த தள்ளாத வயதில் கால் நடையாகச் செல்கிறார். படிக்கும்போது நெஞ்சம் நெக்குருகிக் கண்ணீர் விட்டேன்.

நூற்று இருபது ஆண்டுகள் வாழ்ந்து, ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத் வைதக் கொள்கையை நிலை நிறுத்த அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்கு ஏற்பட்ட எதிர்ப்புகள், சோதனைகள், வேதனைகள் எண்ணில் அடங்காதவை. இராமானுஜரின் வாழ்வு ஒரு தியாக வாழ்வு!

பாரதத்தின்-இந்தியாவின் ஆன்மீகம், பண்பாடு, பாரம் பரியம் இவற்றுக்கு ஆணிவேராகத் திகழ்பவை வேதங்கள், உபநிஷதங்கள், இதிகாசங்கள் ஆகும். இவை காலத்தால் அழியாதவை, என்றாலும் அவற்றைப் பேணிக்காப்பது நம் தலையாய கடமை. நம் பாரம்பரியத்தைக் காத்து வர, ஸ்ரீ ராமநுஜர் போன்ற ஞானிகளின் வரலாற்றைப் படித்து உணர வேண்டும்; உயரிய சிந்தனைகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். வருங்காலத் தலைவரர்களாக உருவாகப் போகிற மாணவ மாணவியர் படித்துப் பயன் பெற வேண்டியது மிக மிக அவசியம்.

ஸ்ரீராமாநுஜர் பற்றி எல்லா மாணவ மாணவியரும் தெரிந்து கொள்ள வேண்டும். அவரது துணிவு, திடசித்தம், அஞ்சாமை, எத்தனை சோதனைகள், இடரீப்பாடுகள் வரினும் போராடி வெற்றி பெறும் திண்மை மாணவர்கள் பெறவேண்டும்—இந்த நோக்கங்கள் ஈடேற அமைந்ததே இந்த, இராமாநுஜர் என்னும் நூல். இதனைத் தமிழ் கூறு நல்லுலகம் இனிதே வரவேற்கும் என்று நம்புகிறேன்.

உணர்ச்சி மயமாகச் சொல்லோவியமாகப் புனையப் பட்டுள்ள இந்நூல் மாணவர்களும், நாடெங்கும் மக்கள் இயக்கமாக மலர்ந்து வரும், வயது வந்தோர் கல்வி மையங் களில் பயின்று புதிதாக எழுத்தறிவு பெறுவோரும் படிக்க இது ஒரு நல்ல நூலாக அமைந்திருக்கிறது, என்பதில் சிறிதும் மிகையில்லை.

**கலைமாமணி மனசை ப. கீரன்**